# பல நாட்டுக் கதைகள்

பண்டித, நா. லக்ஷ்மிநரசிம்மன்




ஆறாம் வகுப்பு



ராஜன் பதிப்பகம், மதுரை

# பல நாட்டுக் கதைகள்

## ஆறும் வகுப்பு




★


ஆசிரியன்

பண்டித நா. லக்ஷிமிநரசிம்மன்

தலைமைத் தமிழாசிரியர்

P. K. நாடார் உயர்நிலைப் பள்ளி

திருமங்கலம்




★


பி. எஸ். இராஜன் பதிப்பகம்

மதுரை

விலை 0-75.

# தேசிய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா

விந்திய ஹிமாசல யமுனு கங்கா
உச்சல ஜலதி தரங்கா

தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே

காயே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே.

---



## நாட்டு வணக்கம்

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறுய்.

நின் திருநாமம், பஞ்சாபையும் சிந்துவையும் குஜராத்தையும் மகாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது; இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன.

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு வெற்றி, வெற்றி, வெற்றி.

# முகவுரை

—* *—
*

"பல நாட்டுக் கதைகள்" என்னும் இந் நூல் சென்னை அரசினர் வகுத்துள்ள புதிய பாடத் திட்டத் தின்படி ஆறும் வகுப்பிற்குத் துணைப் பாடமாக எழு தப்பட்டது. நம் சிறுவர் பல நாட்டுச் செய்திகளை அறிந்துகொள்ள வேண்டும் என்ற நோக்குடன் பல்வேறு நாடுகளிலும் நிகழ்ந்தனவாகப் புனையப்பட்ட கதைகளைக் கொண்டதாக இந்நூல் ஆக்கப்பட்டுள்ளது. மேலும் தமிழ் இலக்கியச் சுவையையும் அம்மாணவர் உணர்ந்து பயன்படுமாறு இனிய எளிய தமிழ் நடையில் எழுதப்பட் டுள்ளது. கதைகளில் பொதிந்துள்ள கருத்துக்கள் மாணவர் உள்ளத்தைப் பண்படுத்தும் முறையில் சுவைபட அமைந்துள்ளன. இங்ஙனம் சீரிய நோக்குடன் சிறுவர்க்காக எழுதப்பட்ட இந்நூலை, அறிஞர்களும், ஆசிரியப் பெருமக்களும், பள்ளித் தலைவர்களும் ஆதரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதனைச் சிறந்த முறையில் வெளியிட்ட 'இராஜன் பதிப்பகத்தார்க்கும்' என் நன்றியைக் கூறிக்கொள்கிறேன்.

இங்ஙனம்

ஆசிரியன்

முதற் பதிப்பு 1961
இரண்டாம் பதிப்பு 1962
மூன்றும் பதிப்பு 1962
நான்காம் பதிப்பு 1963
[ 24 ராத்தல் வெள்ளைக் காகிதத்தில் அச்சிடப் பெற்றது ]

# பொருளடக்கம்



***

எக்ஸெல்ஸியர் பவர் பிரஸ்-மதுரை-1.

# 1. பாதிரியாரின் பண்பு

முன்னுளில் பிரான்சு நாட்டில் மிரியல் என்ருெரு பாதிரியார் வாழ்ந்து வந்தார். அவர் அந்த நாட்டைச் சேர்ந்த டீன் என்னும் இடத்திலுள்ள ஒரு மடத்தின் தலைவர். அன்புகனிந்த உள்ளமுடையவர்; மக்களுக்குத் தொண்டு செய்வதே கடவுட் பணி எனக்கொண்ட நல்ல இயல்புடையவர்; மடத்தின் தலைவருக்குரிய சிறப்புக்களை விரும்பாமல் எளிய வாழ்வையே மேற்கொண்டு வாழ்ந்தவர்; அவருக்கு உதவியாக அவருடன் பிறந்த பாப்டிஸ்தீன் அம்மையாரும் ஒரு வேலைக்காரியும் மட்டுமே இருந்தனர்.

ஒரு சமயம் அவர் ஒரு மருத்துவச் சாலையைப் பார்வையிடச் சென்ருர். அங்குப் பல நோயாளிகள் தங்குவதற்கு இடமின்றித் தவிப்பதை அவர் கண்டார்; அப்பொழுது தமக்கு அவ்வளவு பெரிய மாளிகை தேவையில்லை எனக் கருதினுர். உடனே தம் மாளிகையை மருத்துவச் சாலைக்குக் கொடுத்து விட்டு வேருெரு சிறிய இடத்தில் வாழத் தொடங்கினுர். அவர் எப்பொழுதும் ஏழைகளும் துன்பமடைந்தவர்களும் தம்மை வந்து காணத் தடையிருக்கலாகாதெனக் கருதித் தம் மடத்தின் கதவைத் திறந்தே வைத்திருப்பார்.

ஒருநாள் இரவு பாதிரியார் உணவு கொள்ளச் செல்லும் பொழுது வாயிற்புறத்தில் காலடியோசை கேட்டுத் திரும்பினுர். அப்பொழுது ஒரு முரட்டு மனிதன் உள்ளே நுழைந்தான். அவன் பார்ப்பதற்கே அச்சமூட்டும் தோற்றமுடையவனுக இருந்தான். பாப்டிஸ்தீன் அம்மையாரும் வேலைக்காரியும் அவனைக் கண்டு நடுங்கினர். பாதிரியார் அமைதியுடன் அவனைப் பார்த்தார். உள்ளே நுழைந்த அவன் பாதிரியாரை நோக்கி "ஐயா! என் பெயர் ஜீன்வால்ஜீன் என்பது. நான் பல ஆண்டுகள் சிறையில் கைதியாயிருந்து இப்பொழுதுதான் விடுதலையடைந்தேன்.

இந்த மூன்று நாட்களாக நான் உண்ணவே இல்லை. என்னைக் கண்டதுமே எல்லோரும் தம் வீட்டுக் கதவுகளை மூடிச் செல்கின்றனர். நான் விடுதலை பெற்றும் பயனில்லை. மக்கள் என்னைப் பேயென வெறுக்கிருர்கள், வழியில் ஓர் இளகிய மனமுடைய அம்மையார் 'இவ்விடஞ் சென்ருல் உதவி கிடைக்கும்' எனக் கூறிஞர். அதனுல், இங்கு வந்தேன். ஐயா! பசி காதை அடைக்கிறது. கண் பஞ்சடைகிறது. என்னிடம் சிறிது பொருள் இருக்கிறது. அதைப் பெற்றுக் கொண்டாவது சிறிது உணவு தரவேண்டும்'' என்று தன்னைப் பற்றிக்கூறி உணவு கேட்டான்.

பாதிரியார், 'ஐயா! வாரும் உண்ணச் செல்வோம்' என்று கூறி முன்னே நடந்தார். ஜீன்வால்ஜீன் அளவற்ற வியப்புடன் ''ஐயா! நான் யார் என்பதை நீங்கள் அறிந்து கொண்டீர்களல்லவா? நான் பத்தொன்பது ஆண்டுகள் சிறையில் கிடந்தவன். 'தொல்லை விளைவிப்பவன்' என்று அரசாங்கம் என்னை விளம்பரம் செய்திருக்கிறது. நீங்கள் எனக்கும் அருள் செய்கின்றீர்களா? உண்டபின் குதிரை கட்டும் இடம் கிடைத்தாலும் போதும். படுத்துறங்கிப் பொழுது புலருவதற்குள் சென்றுவிடுவேன்'' என்று கூறிஞன். பாதிரியார் அப்பொழுதும் அமைதியாக 'முதலில் உண்போம். அதற்குள் உறங்கும் இடம் ஏற்பாடாகிவிடும்' எனக் கூறி வேலைக்காரியை நோக்கிஞர்.

சென்ற இடமெல்லாம் வசைமொழியே கேட்ட அவன் பாதிரியாரின் இனிய மொழிகளைக் கேட்டதும் வியப்பில் மூழ்கிஞன். தன்னை அவரிடம் அனுப்பிய அம்மையாரை மனத்திற்குள் வாழ்த்திஞன். உணவு பரிமாறப்பட்டது. அவன் பசி தீர உண்டான். பிறகு பாதிரியார் ஓர் அறையில் அவனைப் படுத்துறங்கச் சொல்லிவிட்டுத் தம் அறைக்குச் சென்ருர். ஜீன்வால்ஜீன் நெடுந்தூரம் நடந்து அலைந்த களைப்பினுல், படுத்தவுடன் அயர்ந்து உறங்கிவிட்டான்.

நள்ளிரவாயிற்று. எங்கும் அமைதி குடிகொண்டது. ஜீன்வால்ஜீன் திடீரென விழித்துக்கொண்டான். அதன் பிறகு அவனுக்கு உறக்கம் வரவில்லை. அவன் மனத்தில் பல பல எண்ணங்கள் எழுந்தன. நல்ல குடும்பத்தில் பிறந்த ஜீன்வால்ஜீன் வறுமையால் வாடிப் பசிக் கொடுமை தாங்காமல் செய்த ஒரு சிறிய களவிற்காகச் சிறைப்பட்டான். சிறையிலிருந்து தப்ப முயன்று மேலும் தண்டனையடைந்தான். இவ்வாறு பத்தொன்பது ஆண்டுகள் சிறையில் கழிக்க நேரிட்டது, சட்டம் செய்த கொடுமையாலும், சிறையில் பலவகைக் குற்றவாளிகளுடன் பழகியதாலும் எண்ணற்ற துன்பங்களை அடைந்ததாலும் அவன் நல்லியல்புகள் நசித்துவிட்டன. ஆனால் பாதிரியாரின் அருட் பார்வையும் அன்பு மொழிகளும் நசித்த நல்லியல்புகளை முளைத்தெழச் செய்தன. அவன் அங்கே கண்ட வெள்ளித் தட்டுகளும் வெள்ளி விளக்குகளும் பழக்கமான தீய நினைவுகளை மீண்டும் தூண்டி விட்டன. ஆகவே அவனுக்கு இயல்பான நல்ல எண்ணங்களுக்கும் பழக்கமான தீய நினைவுகட்கும் அவன் உள்ளத்தில் பெரும் போராட்டம் நடந்தது. மணி மூன்றாயிற்று. முடிவில் தீய நினைவுகளே வெற்றியடைந்தன.

ஜீன்வால்ஜீன் படுக்கையினின்று எழுந்தான்; அடிமேலடிவைத்துச் சென்றான். வெளியறையில் பாதிரியார் உறங்கிக் கொண்டிருந்தார். விளக்கொளியால் அவர் முகம் தெரிந்தது. உறங்கும் நிலையிலும் அவர் முகத்தில் விளங்கும் அன்பையும் அமைதியையும் கண்டு அவன் வியந்தான். மீண்டும் மனத்தில் போராட்டம் ஏற்பட்டது. கடைசியில் துணிவு பெற்று, அங்கிருந்த வெள்ளித் தட்டுகளை எடுத்துக் கொண்டு, திரும்பிப் பாராமல் வெளியேறி இருளில் மறைந்தான் ஜீன்வால்ஜீன்.

பொழுது புலர்ந்தது. பாதிரியார் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தார். அப்பொழுது வேலைக்

காரி பரபரப்புடன் ஓடிவந்து "ஐயா! வெள்ளித் தட்டு களைக் காணவில்லையே" என்று கூறினள். பாதிரியார் சிறிது நேரம் அமைதியாயிருந்து "அம்மையே! நாம் இதுவரை வெள்ளித் தட்டுகளையும் வெள்ளி விளக்கு களையும் வைத்துக்கொண்டிருந்ததே தவறு. தட்டுகளை உரியவனே எடுத்துச் சென்றான். கலங்காதே!" என்று கூறினர்.

அச்சமயம் ஊர்க் காவலர் இருவர் ஜீன்வால் ஜீனைப் பிடித்துக்கொண்டு அங்கு வந்தார்கள். அவ் விருவருள் தலைவன் பாதிரியாரை வணங்கினன். பாதிரியார் ஜீன்வால்ஜீனை நோக்கி "அன்பரே, நீர் மீண்டும் வந்தமைக்கு மகிழ்கின்றேன். நீர் செல்லும் பொழுது உமக்குரிய குத்து விளக்கு ஒன்றை விட்டுச் சென்று விட்டீரே!" என்று அன்பு ததும்பக் கூறினர். காவலர் அதைக் கேட்டதும் திகைப்புற்றனர். அவர்கள் அவனைப் பிடித்து வந்தது தவறு எனக் கருதி "அடிகளே! இவர் தோற்றத்தால் இவரைத் தவருகக் கருதிவிட்டோம்; எங்களை மன்னிக்க வேண்டும்" எனக் கூறிப் பணிந்து விடைபெற்றுச் சென்றார் கள்.

தீமை செய்தவர்க்கும் நன்மையே செய்யும் பாதிரியாரின் பண்பால் தன்னை மறந்த ஜீன்வால்ஜீன் ஒன்றும் பேச அறியாமல், கற்சிலை போல நின்றான். மீண்டும் பாதிரியார் அவனை நோக்கி "அன்பரே, உம் தீய இயல்புகள் இப்பொழுது அடியோடழிந்தன. நீர் இருளிலிருந்து ஒளி வடிவமான இறைவனை நெருங்கி விட்டீர். இனி நீர் சென்றுவரலாம். எப் பொழுது வேண்டினலும் நீர் இங்குத் தாராளமாக வந்து தங்கலாம்" எனக் கூறி விடை கொடுத்து அனுப்பினர்.

ஜீன்வால்ஜீன் பாதிரியாரின் இனிய மொழிகளா லும் நற்பண்புகளாலும் முற்றும் திருந்தியவனய்

வெளியேறினன். அதன் பிறகு அவன் நல்வழியில் நடந்து தொழில் செய்து, செல்வம் திரட்டி, மக்களுக்குத் தொண்டு செய்வதே தன் கடன் எனக் கருதி வாழ்வானயினன்.

### வினுக்கள்

1. பாதிரியாரின் நல்லியல்புகள் யாவை ?
2. பாதிரியார் செய்த நல்ல செயல்கள் யாவை ?
3. ஜீன்வால்ஜீன் தன்னைப் பற்றிக் கூறியது என்ன ?
4. பாதிரியார் 'உண்ணச் செல்வோம்' என்று கூறியதும் ஜீன்வால்ஜீன் கூறியதென்ன ?
5. ஜீன்வால்ஜீன் நல்லியல்புகள் நசித்தது ஏன் ?
6. அவன் உள்ளத்தில் எழுந்த போராட்டம் என்ன ?
7. பாதிரியார் வேலைக்காரியிடம் கூறியதென்ன ?
8. காவலருடன் வந்த ஜீன்வால்ஜீனைப் பார்த்ததும் பாதிரியார் கூறியதென்ன ?
9. ஜீன்வால்ஜீன் கற்சிலை போல் நின்றது ஏன் ?
10. பாதிரியார் ஜீன்வால்ஜீனுக்குக் கூறிய அறிவுரை என்ன ?
11. ஜீன்வால்ஜீன் அதன் பிறகு எவ்வாறு வாழ்ந்தான் ?

## 2. ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு

முன்னொரு காலத்தில் கோதாவரி ஆற்றங்கரையருகில் வேடன் ஒருவன் வாழ்ந்து வந்தான். ஒரு நாள் அவன் நீண்ட நேரம் வேட்டையாடியும் அவனுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. அவன் களைத்துப் போய் ஒரு மரத்தடியில் வலையைப் பரப்பி வைத்து அதன் மேல் தானியங்களைத் தூவி விட்டு ஓரிடத்தில் மறைந்திருந்தான். அப்பொழுது ஒரு புருக் கூட்டம் பறந்து வந்து அம்மரத்தில் தங்கியது. கீழே தானியங்கள் சிதறிக் கிடப்பதைக் கண்ட சில புருக்கள் அதனைப் புருவரசனிடம் தெரிவித்தன. புருவரசு அதைப் பார்த்து "மரத்தடியில் இவ்வளவு தானியங்கள் எப்படி வந்தன? இதில் ஏதோ சூழ்ச்சி இருக்க வேண்டும். ஆராய்ந்து பாராமல் ஆசைப்பட்டு ஏதேனும் துன்பத்தில் அகப்பட்டுக் கொள்ளலாகாது" என்று கூறியது.

"வீண் ஐயம் கொண்டு கையிற் கிடைத்ததை விட்டு விடலாமா? அந்தத் தானியங்களை எப்படியும் தின்ன வேண்டும்" என்று சில புருக்கள் எண்ணமிட்டன. அவற்றுள் ஒன்று கீழே இறங்கி வலையின் மேல் அமர்ந்து தானியங்களைக் கொத்தித் தின்னத் தொடங்கியது. அதைக் கண்ட மற்ற புருக்களும் ஒவ்வொன்ருகக் கீழே இறங்கித் தின்னத் தொடங்கின. புருக்களின் கால்கள் வலையில் சிக்கிக்கொண்டன. அவை பறக்க முயன்றும் முடியவில்லை. முடிவில் புருவரசும், 'நான் என்ன சொல்லியும் இவை கேட்கவில்லை. இனி இவற்றை விட்டு நான் மட்டும் தனித்திருப்பதில் பயனில்லை. இவற்றிற்கு வரும் துன்பத்தை நானும் சேர்ந்து அடைவதே தக்கது' என்று எண்ணிக் கீழே இறங்கி வலையில் சிக்கிக் கொண்டது.

மறைவிலிருந்து இதைப் பார்த்துக் கொண்டு இருந்த வேடன் எல்லாப் புருக்களும் வலையில் சிக்கி

விட்டதை அறிந்து மகிழ்ந்தான். தன் மறைவிடத்தினின்று வெளிப்பட்டுப் புருக்களைப் பிடித்துக்கொள்ள வந்தான். வேடனைத் தொலைவில் கண்ட புருக்கள் 'ஐயோ, ஆசையால் அறிவை இழந்தோம். தலைவன் சொல்லைக் கேளாமல் வந்து வலையிற் சிக்கிக் கொண்டோமே' என்று வருந்தின. புருவரசன் மற்றப் புருக்களைப் பார்த்து 'ஆராயாது செய்த செயலின் பயனைப் பார்த்தீர்களா? நடந்ததை நினைத்து வருந்திக் கொண்டிருப்பதிற் பயனில்லை. நம்மைக் கொல்லவரும் வேடன் கையில் அகப்படாமல் நாம் தப்பவேண்டும். நாம் எல்லோரும் ஒற்றுமையாக இந்த வலையையும் தூக்கிக் கொண்டு பறந்தால் தப்பலாம்' என்றது. புருக்களும் அதற்கு இசைந்து அப்படியே ஒற்றுமையாகச் சிறகடித்துப் பறந்தன. வலையையும் தூக்கிக் கொண்டு அவை பறந்து செல்வதைக் கண்ட வேடன் பெருத்த ஏமாற்றம் அடைந்து நின்றான்; புருக்களும் அகப்படாமல் வலையையும் இழக்க நேர்ந்தது பற்றி வருந்தினான். ஆனால் புருக்கள் சண்டையிட்டுக் கொண்டு வலையின் சுமை தாங்காமல் விரைவில் கீழே விழுந்து விடும் எனக் கருதி அவற்றைத் தொடர்ந்து சிறிது தொலைவு வரை அவன் ஓடினான். புருக்களோ தலைவன் சொல்லுக்குக் கட்டுப்பட்டு ஒற்றுமையாகப் பறந்து சென்று அவன் கண்களுக்குத் தெரியாமல் மறைந்தன. வேடன் உடம்பு களைத்து மனமும் சோர்ந்து வந்த வழியே திரும்பிச் சென்றான்.

புருவரசு தன் இனத்தவரைப் பார்த்து "தோழர்களே! அடுத்த காட்டில் என் நண்பன் எலியரசன் ஒருவன் இருக்கிறான். அவன் உதவியால்தான் நாம் இந்த வலையிலிருந்து விடுதலை பெறமுடியும். ஆகையால் அவ்விடத்தை நோக்கிச் செல்ல வேண்டும்" என்று கூறியது. புருக்களும் விடாமல் பறந்து சென்று எலியரசன் வாழும் வளைக்கருகில் வந்து இறங்கின. பறவைகளின் பேரொலி கேட்ட எலியரசு பகைவர் யாரேனும் தன்னைக் கொல்ல வந்துவிட்டார்களோ

என்று அஞ்சி வளையில் பதுங்கிக்கொண்டு வெளியில் வராமல் இருந்தது. அப்பொழுது புறாவரசு "அன்பனே! புறாவரசனாகிய நான் தான் என் இனத்துடன் வந்திருக்கிறேன். கலங்காமல் வெளியே வா" எனக் கூவியது.

தன் நண்பன் குரலோசை கேட்ட எலியரசு அச்சம் நீங்கி மெல்ல வெளியே எட்டிப் பார்த்தது. புறாவரசு கூட்டத்துடன் வலையில் சிக்கிக் கொண்டிருப்பது கண்டு 'சிறந்த அறிவாளியான நீ எப்படி இத் தொல்லையுள் சிக்கினாய்' என்று கேட்டது எலியரசு. புறாவரசு 'யார்க்கும் வருவது வந்தே தீரும். இப்பொழுது இதைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்க நேரமில்லை. வலை எங்கள் கால்களை இறுக்கிக்கொண்டிருக்கிறது. விரைவில் எங்களை விடுதலை செய்' என்று வேண்டிக் கொண்டது. எலியரசு உடனே தன் கூரிய பற்களால் வலையை அறுத் தெறிந்தது. புறாக்கள் யாவும் விடுதலை பெற்று மகிழ்ச்சி அடைந்தன.

வலையிலிருந்து விடுதலை பெற்ற புறாவரசு தன் நண்பனை நோக்கி, 'தானியங்களைத் தின்னவேண்டும் என்ற ஆசையால் நாங்கள் வலையில் அகப்பட்டாலும் ஒற்றுமையாகப் பறந்து வேடன் கையில் சிக்காமல் தப்பிப் பிழைத்தோம். அவ்வாறு தப்பினாலும் இப்பொழுது உன் உதவி இல்லையானால் இத்தொல்லை முற்றும் நீங்கி நாங்கள் விடுதலை பெற்றிருக்க முடியாது. நீ செய்த இப்பேருதவியை நாங்கள் என்றும் மறவோம். ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு என்பதை உணர்ந்தோம். நட்பின் பெருமையையும் நன்கு கண்டோம்' என்று கூறி நன்றி தெரிவித்துப் பின் தன் இனத்துடன் பறந்து சென்றது.

## வினாக்கள்

1. வேடன் செய்தது என்ன ?
2. தானியங்களைப் பார்த்த புறாவரசு கூறியதென்ன ?
3. சில புறாக்கள் எவ்வாறு எண்ணமிட்டன ?
4. புறாக்களும் புறாவரசும் எவ்வாறு வலையில் சிக்கிக் கொண்டன ?
5. புறாக்கள் எவ்வாறு வருந்தின ?
6. புறாவரசு வேடனிடம் அகப்படாமல் தப்புவதற்குக் கூறிய சூழ்ச்சி என்ன ?
7. வேடன் அடைந்த ஏமாற்றமும் வருத்தமும் யாவை ?
8. புறாக்கள் எங்கே சென்றன ?
9. புறாக்கள் எவ்வாறு விடுதலை பெற்றன ?
10. புறாவரசு தன் நண்பனிடம் நன்றி தெரிவித்துக் கூறியதென்ன ?

# 3. மாலுமியின் கதை

பாகுதாது பட்டணத்தில் முன்னொரு காலத்தில் சிந்துபாத் என்ற பெருஞ் செல்வர் வாழ்ந்து வந்தார். அவர் பலமுறை திரைகடல் ஓடிக் கப்பல் வாணிகம் செய்து பெரும் பொருள் திரட்டிச் சிறப்புடன் வாழ்ந்தார். அவர் கப்பல் வாணிகத்தில் பட்ட துன்பங்கள் பல. எவ்வளவு துன்பம் வந்தாலும் மனம் கலங்காது பொறுமையுடன் அவற்றை எதிர்த்து வென்று வந்தார். அவர் ஒருமுறை கப்பல் வாணிகம் செய்து திரும்பிய நிகழ்ச்சியைக் காண்போம்.

ஒரு நல்ல நாளில் கப்பலில் சரக்குகளை ஏற்றிக் கொண்டு நண்பர்களுடன் புறப்பட்டார் சிந்துபாத்; வழியில் பல நகரங்களில் தங்கி வாணிகம் செய்து கொண்டே மேலும் சென்றார். ஒரு நாள் கப்பல் ஒரு தீவை அடைந்தது. சிந்துபாத்தும் நண்பர்களும் அத் தீவில் இறங்கி உணவு சமைத்து உண்டனர். உண்ட பின் சிறிது உறங்கலாம் என்று எண்ணிச் சிந்துபாத் ஒரு மரத்தடியில் சென்று படுத்தார். கடற் காற்று மெல்ல வீசியது. சிந்துபாத் அயர்ந்து உறங்கி விட்டார்.

சிந்துபாத் உறங்கும்பொழுது நண்பர்களாக வந்தவர்கள் அவரை அத்தீவிலேயே விட்டு விட்டுக் கப்பலை ஓட்டிச் சென்று விட்டனர். சிந்துபாத் விழித்தெழுந்து அவர்களைக் காணமல் கடலோரம் சென்று பார்த்துக் கப்பலையும் காணது மயங்கினர், உயர்ந்த பாறைமேல் நின்று பார்த்தார்; நெடுந்தூரத்தில் கப்பல் செல்வதைக் கண்டார். அவர்கள் தன்னை மோசம் செய்து விலையுயர்ந்த சரக்குகளுடன் கப்பலை ஓட்டிச் சென்றதை நினைத்து வருந்தினர். மனம் சோர்ந்து அப்படியே உட்கார்ந்து விட்டார்.

அவர் இருந்த இடத்திற்குச் சிறிது தொலைவில் பெரிய முட்டை வடிவமான பொருள் ஒன்று காணப் பட்டது. அது என்ன என்பதை அறியும் ஆவலால் சிந்துபாத் மெல்ல எழுந்து அதனருகில் சென்றார். அதைத் தட்டிப் பார்த்து அது பாறையன்று அது ஒரு பறவை முட்டைதான் என்றறிந்து வியப்படைந்து பார்த்துக்கொண்டே நின்றார். திடீரென்று வானம் இருண்டுவருவது போல் தோன்றியது. அவர் மேலே நிமிர்ந்து பார்த்தார்; வானத்தில் மிக உயரத்தில் மிகப் பெரிய பறவையொன்று பறந்து வருவதைக் கண்டார். அவர் அதற்கு முன் அவ்வளவு பெரிய பறவையைப் பார்த்ததேயில்லை. அது பறந்துவந்து அந்த முட்டை யின் மேல் அமர்ந்தது.

சிந்துபாத்துக்கு திடீரென்று ஓர் எண்ணம் தோன்றிற்று. அத்தீவிலிருந்து தப்புவதற்கு வேறு வழியில்லை என்றுணர்ந்தார். அவர் உடனே அவர் தன் தலைப்பாகைத் துணியை அவிழ்த்து அப்பறவை யின் கால்களோடு தன்னை இறுகச் சேர்த்துக் கட்டிக் கொண்டார். சிறிது நேரத்தில் அந்தப் பறவை மேலே எழுந்து வானத்தில் பறந்து சென்றது. சிந்துபாத் கீழே பறந்து கிடந்த கடல் பரப்பைக் கண்டு நடுங்கி னார். நெடுந்தூரம் பறந்த அப்பறவை வேறொரு தீவில் இறங்கி ஒரு பாறையின் மேல் அமர்ந்தது. இதுதான் சமயமென்று சிந்துபாத் தன் கட்டை அவிழ்த்துக் கொண்டு ஒதுங்கிச் சென்று ஓரிடத்தில் பதுங்கிக் கொண்டார். அந்தப் பறவை பள்ளத் தாக்கை நோக்கிப் பறந்து சென்றது.

பாறையின் மறைவில் பதுங்கியிருந்த சிந்து பாத்து கீழே பள்ளத்தாக்கை நோக்கினார். அங்கே அவர் கண்ட காட்சியால் நடு நடுங்கினார். யானையை யும் விழுங்கக்கூடிய அகன்ற வாயையுடைய மலைப் பாம்புகள் அங்கே ஊர்ந்துகொண்டிருந்தன. கீழே பறந்து சென்ற அப்பறவை அவற்றுள் ஒன்றைக் கொத்திக் கொண்டு பறந்து சென்று மறைந்தது.

'ஐயோ முன்னே இருந்த தீவில் உயிருடனுவது வாழ்ந்திருக்கலாமே. அதைவிட்டு இந்தப் பாம்புத் தீவில் சிக்கிக் கொண்டேனே' என்று கலங்கினர். அக்கலக்கத்தால் கால் தடுமாறிப் பள்ளத்தாக்கில் உருண்டு விழுந்தார்.

பள்ளத்தாக்கில் விழுந்த சிந்துபாத் சிறிது நேரம் அப்படியே நினைவிழந்து கிடந்தார். பிறகு மெல்லக் கண் விழித்துச் சுற்று முற்றும் பார்த்தார். பெரிய பெரிய பாம்புப் புற்றுகளைக் கண்டு அஞ்சினர். கீழே தரையில் சிதறிக் கிடந்த பொருள்களைக் கண்டு பெரு வியப்படைந்தார். பேரொளி வீசும் வைரக் கற்கள் அங்கு மிகுதியாகச் சிதறிக் கிடந்தன, அவ்வளவு பெரிய வைரக் கற்களை அவர் அதுவரை கண்டதே யில்லை. ஒவ்வொரு கல்லும் மிக்க விலையுள்ளது என் பதை உணர்ந்தார். உடனே தன்னுல் முடிந்தவரை பல வைரக் கற்களை எடுத்துத் தன் பையில் வைத்துக் கொண்டார். ஆனல் அந்தப் பாம்புத் தீவைவிட்டு உயிருடன் எவ்வாறு வெளியேறுவது என்று எண்ண மிடத் தொடங்கினர் சிந்துபாத் மாலுமி.

அமைதி நிலவிய அந்த இடத்தில் திடீரென்று பெரிய பெரிய இறைச்சித் துண்டுகள் வந்து விழுந்தன. உடனே பெரிய பறவைகள் பறந்து வந்து அவ்விறைச்சித் துண்டுகளைக் கால்களில் இடுக் கிக்கொண்டு பறந்து சென்றன. சித்துபாத் தான் தப்புவதற்கும் ஏற்ற வழியைக் கண்டார். உடனே ஒரு பெரிய இறைச்சித் துண்டுடன் முன்போல் தலைப் பாகைத் துணியால் தன்னைப் பிணித்துக் கொண்டார். ஒரு பெரும் பறவை அவ்விறைச்சித் துண்டைப் பற்றிக் கொண்டு பறந்து சென்று ஒரு பெரிய மரப் பொந் திற்குள் வீசி எறிந்துவிட்டுச் சென்றது. சிந்துபாத் அவ்விறைச்சித் துண்டுடன் அப்பொந்தில் எறியப் பட்டார். அப்பொந்தில் இறகு முளைக்காத பல குஞ்சுகள் இருந்தன. அக்குஞ்சுகள் தின்பதற் காகவே தாய்ப் பறவை இறைச்சியை எடுத்து

வந்து போட்டிருக்கிறது என்றறிந்தார் சிந்துபாத். இனி எப்படியும் பெரிய பறவை வருவதற்குள் தப்பிச் செல்லவேண்டும் என்று எண்ணினுர் அவர்.

அப்பொழுது பொந்திற்கு வெளியே பெரிய ஆரவாரம் கேட்டது. பலர் மரத்தடியில் நின்று கூச்சலிட்டார்கள். அவர்களில் இருவர் மரத்தின் மேல் ஏறி வந்து பொந்தினுள் எட்டிப் பார்த்து அங்கு சிந்துபாத்தைக் கண்டு வியப்படைந்தார்கள். அவர்கள் அந்த இறைச்சித் துண்டில் ஒட்டிக் கொண்டிருந்த வைரக் கற்களை எடுத்துக்கொண்டு கீழே இறங்கினர். சிந்துபாத்தும் கீழே இறங்கி அவர்களுடன் சேர்ந்து கொண்டார்.

அவர்கள் சிந்துபாத்தைப் பல கேள்விகள் கேட்டு அவர் வரலாறு முழுமையும் அறிந்து இரக்கம் கொண்டார்கள். சிந்துபாத் கொடும் பாம்புகள் நிறைந்த அப் பள்ளத்தாக்கில் வைரக் கற்கள் மிகுதியாகக் கிடப்பதை அறிந்து எடுப்பதற்கே இத் தந்திரத்தைக் கையாளுகிருர்கள் என்று அறிந்துகொண்டார். அவர்கள் மரப் பொந்துகளில் தேடி எடுத்த வைரக் கற்களுடன் தம் நாடு நோக்கிப் புறப்பட்டனர். சிந்துபாத்தும் அவர்களுடன் சேர்ந்து கொண்டு பல நாடுகளில் இறங்கித் தாம் எடுத்து வந்த வைரங்களை விற்றுப் பெரும் பொருள் திரட்டினுர். முடிவில் ஒரு துறைமுகப் பட்டினத்தை அடைந்து அங்கு வந்த கப்பலில் ஏறிப் பல மாதங்கள் கடலில் பிரயாணம் செய்து பாக்தாத் நகரம் வந்தடைந்தார். இதுபோல் சிந்துபாத் ஏழு முறை கடல் பிரயாணம் செய்திருக்கிருர்.

வினக்கள்

1. *சிந்துபாத்தைப் பற்றிய சிறு குறிப்புக்கள் யாவை ?*
2. *சிந்துபாத் தீவில் தனிமையாக நின்றது என் ?*

3. சிந்துபாத் தீவில் கண்ட பொருள் என்ன ?

4. அவர் அத்தீவை விட்டு எவ்வாறு வெளியேறினர் ?

5. சிந்துபாத் போய்ச் சேர்ந்த இரண்டாவது தீவில் கண்ட காட்சி என்ன ?

6. பள்ளத்தாக்கில் அவர் கண்ட அதிசயம் என்ன ?

7. அங்கிருந்து எவ்வாறு தப்பிச் சென்றார் ?

8. வைரக் கற்களைச் சேகரிக்க அம்மக்கள் செய்த உபாயம் என்ன ?

9. சிந்துபாத் எவ்வாறு தம் ஊர் போய்ச் சேர்ந்தார் ?

---

# 4. பகைவனுக் கருள்வாய்

ஜினேவாவில் குடியாட்சி நிலவிய பண்டை நாளில் அங்கு இரண்டு கட்சிகள் இருந்தன. பொது மக்கள் கட்சி ஒன்று. செல்வம் மிகுந்த பிரபுக்கள் கட்சி மற்றொன்று. பொதுமக்கள் கட்சிக்குத் தலைவனாக விளங்கியவன் உபர்ட்டோ என்னும் உத்தமன்; வறுமைக் குடியில் பிறந்து உழைப்பால் உயர்ந்தவன்; சிறந்த பண்புகள் நிறைந்தவன். அவனது கட்சி ஆட்சியைக் கைப்பற்றி நீண்ட காலம் ஆண்டு வந்தது. உபர்ட்டோவே நாட்டின் தலைவனாக விளங்கினான்.

பொதுமக்கள் ஆட்சிக்கு முன் நெடுங்காலம் ஆட்சிப் பொறுப்பைக் கைக்கொண்டிருந்த பிரபுக்கள் மக்களாட்சியின் மேல் ஆத்திரம் கொண்டனர். உபர்ட்டோவையும் அவனது கட்சியையும் அறவே வெறுத்தனர். தங்கள் கட்சி ஆற்றலை ஒன்று திரட்டினர். தேர்தலில் வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றினர். ஆட்சி மாறியதும் அப் பிரபுக்கள் உபர்ட்டோவை நாட்டிற்குக் கேடு சூழ்பவன் என்று குற்றம் சாட்டிச் சிறை செய்தனர்.

சில நாட்களில் அற மன்றம் உபர்ட்டோவின் மேலுள்ள வழக்கை ஆராய்ந்தது. அற மன்றத்தின் தலைவன் அடார்னோ என்னும் பிரபு. அவன் தற்பெருமையும், இறுமாப்பும் ஒருங்கே அமையப் பெற்றவன். அவனிடம் நேர்மையான தீர்ப்பை உபர்ட்டோ எதிர்பார்க்கவில்லை. அவன் நினைத்தபடியே நடந்தது. உபர்ட்டோவின் சொத்துக்கள் யாவும் பறிமுதல் செய்யப்பட்டன. அவனும் நாட்டைவிட்டு வெளியேறிவிட வேண்டுமென்று தீர்ப்பு அளிக்கப்பட்டது. தீர்ப்பின் முடிவில் அடார்னோ மிகுந்த இறுமாப்புடன் உபர்ட்டோவை நோக்கி “ஏ! இழிதொழில் புரிபவன் மகனே! ஜினேவாவில் வாழும் பிரபுக்களை அடக்கி

யாளத் துணிவு கொண்ட உனக்கு அவர்களது இரக்கம் உயிர்ப் பிச்சை அளிக்கிறது. ஆனால் இனி என்றுமே இந்த நாட்டைக் கனவிலும் எண்ணாமல் நிலையாகச் சென்றுவிடவேண்டும்" என்றான்.

இந்த முறையற்ற தீர்ப்பை உபர்ட்டோ சிறிதும் தயக்கமின்றி ஏற்றுக்கொண்டான். ஆனால் அடார்னேவின் சுடுசொற்கள் அவனை வருத்தின. உபர்ட்டோ அடார்னேவை நோக்கி, 'தாங்கள் இன்று என்னைக் கூறிய கொடுஞ் சொற்களை நினைத்து வருந்தும் நாள் வரக்கூடும்' என்று கூறிப் பணிவுடன் அற மன்றத்தை விட்டகன்றான். அவன் தன் நண்பர்களிடம் விடைபெற்றுக்கொண்டு நேபிள்ஸ் நகரத்திற்குப் பயணமானான்.

ஆண்டுகள் பல சென்றன. உபர்ட்டோ தனக்கு வரவேண்டிய தொகைகள் பலவற்றை வசூலித்தான். வெனிஸ் நாட்டைச் சேர்ந்த ஒரு தீவில் தங்கி வாணிகத் தொழிலை மேற்கொண்டான். தன் உழைப்பாலும் உண்மையாலும் பெரும் பொருள் தேடினான். அவனது ஈகைப்பண்பு அவன் தேடிய பொருள் போல் வளர்ந்தது. அவனது பேரும் புகழும் எங்கும் பரவின.

ஒரு சமயம் உபர்ட்டோ டூனிஸ் நகரம் சென்றிருந்தான். அந்நகரப் பெருமக்களில் ஒருவர் வீட்டில் இளைஞன் ஒருவன் அடிமைப்பட்டு விலங்குகளுடன் கடுமையான வேலைகளில் ஈடுபட்டிருப்பதை அவன் கண்டான். அச்சிறுவன் தோற்றத்திலிருந்து அவன் ஒரு செல்வக்குடியிற் பிறந்தவனாயிருத்தல் வேண்டுமென்று உபர்ட்டோ எண்ணினான். இரக்கம் மிகுந்த உபர்ட்டோ அவனை நோக்கி 'இளைஞனே! உன் பெயர் என்ன? நீ எந்த ஊரைச் சேர்ந்தவன்? உன் பெற்றோர் யாவர்? ஒன்றையும் ஒளிக்காமல் என்னிடம் சொல்' என்று இத்தாலிய மொழியில் கேட்டான். தன் தாய் மொழியில் பேசிய உபர்ட்டோவை உற்று நோக்கிய சிறுவன் 'நான் ஜினேவாவில் பிறந்தவன்

என் தந்தையின் பெயர் அடார்னே. நான் அவரது ஒரே மகன். நான் கடற்பிரயாணம் செய்யும் பொழுது என்னைப் பிடித்து அடிமையாக்கி விட்டார்கள்' என்று கண்ணீர் வடியக் கூறினன்.

அடார்னே என்னும் பெயரைக் கேட்டவுடன் உபர்ட்டோ அடைந்த வியப்பிற்கு அளவேயில்லை. தன் பகைவனுக்கு அருள ஆண்டவனே தனக்கு ஒரு வாய்ப்பு அளித்திருப்பதாக அவன் கருதினன். உடனே அந்த இளைஞனை அடிமையாக உரிமை கொண்டாடும் கப்பல் தலைவனிடம் சென்ருன். அவ் விளைஞனை எனக்கு விற்றுவிட வேண்டும். அதற்கு வேண்டும் பொருள் யாது'? எனக் கேட்டான். கப்பல் தலைவன் வேண்டிய இரண்டாயிரம் பொற்காசுகளைக் கொடுத்துவிட்டுச் சிறுவனிடம் சென்ருன் உபர்ட்டோ. சிறுவனைப் பிணித்திருந்த விலங்குகளை அகற்றினன். புதிய ஆடைகளைக் கொடுத்து அணியச் செய்தான். நடப்பது கனவோ நனவோ எனச் சிறுவன் எண்ணி நின்ருன். உபர்ட்டோவின் அன்பையும் அருளையும் எண்ணி வியப்பும் மகிழ்ச்சியும் கொண்டான்.

தான் வந்த வேலை முடிந்ததும் உபர்ட்டோ அச் சிறுவனுடன் தன்னூர் திரும்பினன்; சில நாட்கள் அச்சிறுவனைத் தன் வீட்டில் இருக்கச் செய்தான்; தன் ஆருயிர் நண்பனது மகனுக இருந்தால் எவ் வளவு அன்போடும் பண்போடும் ஆதரிப்பானே அவ் வளவு அன்போடும் ஆர்வத்தோடும் தன் கொடிய பகைவன் மகனுகிய அவ்விளைஞனை ஆதரித்தான் உபர்ட்டோ.

சில நாட்கள் சென்றபின் உபர்ட்டோ அவனைப் பார்த்து 'சிறுவனே! உன்னைக் காணுது வருந்தும் உன் பெற்ருேரிடம் நீ செல்ல வேண்டுமல்லவா? அதனுல் உன் நாட்டிற்கு உன்னை அனுப்பி வைக்க எண்ணுகிறேன்' என்று கூறி, வேண்டும் பொருளைக் கொடுத்துத் தகுந்த துணையுடன் ஜினேவாவிற்கு

அவனை அனுப்பி வைத்தான்; அவனது தந்தைக்கு ஒரு கடிதத்தையும் அவனிடம் கொடுத்தான். அச் சிறுவனும் தன் நன்றியைத் தெரிவித்து விடை பெற்றுச் சென்றான்.

கப்பல் கடலில் மூழ்கியதால் மகன் இறந்து விட்டான் என்று வருந்தியிருந்த பெற்றோர், மகனைக் கண்டதும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. தான் டுனிஸ் நகரில் அடிமையாய் இருந்ததையும், ஓர் உத்தமன் உதவியால் விடுதலை அடைந்ததையும் அவ்விளைஞன் தன் தந்தையிடம் விளக்கமாகக் கூறினான். அதைக் கேட்ட அடார்னே 'உன்னை விடுதலை செய்ய உதவிய அவ்வுத்தமன் யார்?' எனக் கேட்டான். உடனே மகனும் தந்தையிடம் உபர்ட்டோ கொடுத்த கடிதத்தை நீட்டினான். அக் கடிதத்தைப் பிரித்துப் படித்தான் அடார்னே.

"இறுமாப்புக் கொண்ட பிரபுவே, உன்னால் முறையின்றி நடத்தப்பட்டு நாடு துறந்தவன் எவனோ, அந்த இழிதொழில் புரிவோன் மகனே இன்று உன் மகனைக் காப்பாற்றியவன் என்பதை அறிந்துகொள். அன்று, அற மன்றத்தில் 'நீ கூறிய கடுஞ் சொற்களை நினைத்து வருந்தும் நாள் வரக்கூடும்' என்று அவன் சொல்லி வந்த சொற்கள் இன்று உண்மையாகி விட்டன என்பதை அவன் காண்கிறான்" என்று அக்கடிதத்தில் எழுதியிருந்தது.

இதைப் படித்த அடார்னே கண்ணீர் விட்டுக் கதறினான். உத்தமனின் மனம் நோகத் தான் செய்ததை நினைத்து வருந்தினான். உடனே தன் நண்பர்களிடம் உபர்ட்டோவுக்காகப் பரிந்து பேசினான். அதன் பயனாக உபர்ட்டோவின் மேலிருந்த தடை நீக்கப்பட்டது. அவ்வுத்தமனும் தன் தாய்நாடு திரும்பினான். அவன் பலராலும் போற்றப்பட்டு நீண்ட காலம் அமைதியாக வாழ்ந்தான்.

## வினாக்கள்

1. ஜினேவாவில் இருந்த இரண்டு கட்சிகள் யாவை ?
2. மக்கள் கட்சித் தலைவன் யார் ? அவன் எத்தகையவன் ?
3. பிரபுக்கள் மக்கள் கட்சியை வெறுத்தது ஏன் ?
4. ஆட்சி மாறியதும் பிரபுக்கள் செய்தது என்ன ?
5. அற மன்றத்தின் தலைவன் யார் ? அவன் எப்படிப் பட்டவன் ?
6. அடார்னே அளித்த தீர்ப்பும், கூறிய சொற்களும் யாவை?
7. உபர்ட்டோ அடார்னேவை நோக்கிக் கூறியதென்ன ?
8. உபர்ட்டோ எங்கு எவ்வாறு வாழ்ந்தான் ?
9. உபர்ட்டோ தன் பகைவனுக்கருளும் வாய்ப்பாக எதனைக் கருதினன் ?
10. உபர்ட்டோ அடார்னேவின் மகனை எவ்வாறு ஆதரித்தான் ?
11. உபர்ட்டோ அடார்னேவிற்கு எழுதியது என்ன ?
12. அடார்னே மனம் திருந்திச் செய்தது என்ன ?

# 5. சொன்ன சொற்காத்த தூயோன்

பல்லாண்டுகளுக்கு முன் செல்வர் ஒருவர் இருந்தார். அவர் கடல் வாணிகத்தில் பெரும் பொருள் திரட்டினர். அவரது ஒரே மகன் டாப்ரிவே என்பான். அச் செல்வ மகன் நுண்ணறிவும் நல்ல உழைப்பும் இரக்க மனமும் ஒருங்கே அமையப் பெற்றவன். அவனுக்குத் தக்க வயது வந்தவுடன் அவனைக் கடல் வாணிகத்திற்கு அனுப்ப அவன் தந்தை நினைத்தார்.

ஓர் அழகிய கப்பல் ஏற்பாடு செய்யப்பட்டது. பல வகையான சரக்குகள் அக்கப்பலில் ஏற்றப்பட்டன. தந்தை மகனைப் பார்த்து "அருமை மகனே, கப்பலில் பல்லாயிரம் ரூபாய் பெறும் சரக்குகள் உள்ளன. அவைகளைத் தக்க விலைக்கு விற்றுப் பெருஞ் செல்வனாக வரவேண்டும் என்பது என் விருப்பம். நீ சிறந்த முறையில் வாணிகம் செய்வாயென எனக்கு நம்பிக்கை உண்டு' என்று கூறி மகனை அனுப்பி வைத்தார்.

டாப்ரிவே, தந்தை கூறிய அறிவுரைகளைக் கேட்ட பிறகு, தந்தையையும், தாயையும் வணங்கித் தன் பயணத்தைத் தொடங்கினன். கடலில் கப்பல் விரைந்து சென்றது. அப்போது இக்கப்பலை நோக்கித் துருக்கியரது கப்பல் ஒன்று வந்தது. இக்கப்பலை அது நெருங்கியதும் அங்கிருந்து பலர் அலறி அழுங்குரலைக் கேட்டான் டாப்ரிவே. உடனே, அவன் அக் கப்பல் தலைவனைப் பார்த்து 'ஐயா! உமது கப்பலில் உள்ளவர்கள் அழுவதன் காரணமென்ன? அவர்கள் நோயால் வருந்துகிருர்களா அல்லது பசியால் வாடுகின்றனர்களா?' என்று கேட்டான். அதற்கு அக் கப்பல் தலைவன் 'ஐயா, நோயும் இல்லை, பசியும் இல்லை. அழுபவர் என் அடிமைகள். அவர்களை நல்ல விலைக்கு விற்கக் கொண்டு செல்கிறேன். அதனால் அழுகின்றார்கள்' என்றான். இதைக் கேட்ட டாப்ரிவேயின் மனம் மிகவும் வருந்தியது. அவ்வடிமைகளை உடனே விடுவிக்க எண்ணினன்.

டாப்ரிவே, அத்துருக்கியக் கப்பல் தலைவனை நோக்கி, 'என் கப்பலிலுள்ள பொருள்களை எடுத்துக் கொண்டு உங்கள் கைதிகளை என்னிடம் கொடுத்து விடுங்கள்'' எனக் கூறினன். எதிர்பாராத இந்த வாணிகத்தைக் கண்டு மகிழ்ந்த அத்தலைவன் கைதிகளை விட்டு விட்டு விலைமிக்க பொருள்களை எடுத்துச் சென்றுன். டாப்ரிவே, தான் விடுவித்த கைதிகளை அவரவர் நாட்டிற்கு அனுப்பி வைத்தான். அவர்களும் அவனை வாயார வாழ்த்திச் சென்றனர்.

அக் கப்பலில் இருந்த கைதிகளில் இருவரை மட்டும் அவனுல் அனுப்பி வைக்க இயலவில்லை. அவர்களில் ஒருத்தி இளம் பெண். மற்ருெருத்தி வயதான மூதாட்டி. அவ்விளம்பெண், தான் ரஷ்ய நாட்டு அரசிளங்குமரி என்றும், மூதாட்டி தன் தாதி என்றும் சொன்னுள்; உழைத்து உண்டு வாழ்வதே தங்கள் நோக்கம் என்று கூறினுள். டாப்ரிவே, அவள் தன்னை மணந்துகொள்ள இசைந்தால் அவர்களைப் பாது காப்பதாக அறிவித்தான். அவளும் அதற்கு முழு மனத்துடன் இசையவே டாப்ரிவே கப்பலுடன் தன் ஊர் திரும்பினுன்.

பெரும்பொருள் திரட்டி வருவான் என்று எதிர் பார்த்த தந்தை ஏமாற்றமடைந்தார். "தந்தையே, தாங்கள் எனக்களித்த பொருள் பலர் துன்பம் துடைக்க உதவியது கேட்டுத் தாங்கள் மகிழ்ச்சி அடைவீர்கள் என நம்புகிறேன். மேலும் இதோ நிற்கும் உமது மருமகள் அளவிட முடியாத செல்வமாவாள்'' என்றுன் டாப்ரிவே. இதைக் கேட்ட தந்தை கொண்ட கோபம் அளவிட முடியாதது. "மூடனே, பணத்தைப் பாழாக்கிய உன் முகத்தில் விழித்தலும் கூடாது'' என்று வெறுத்துரைத்தார்.

நாட்கள் பல சென்றன. தந்தையின் சினமும் குறைந்தது. மீண்டும் ஒரு கப்பல் நிறையப் பொருளை ஏற்றித் தன் மகனை வாணிகம் செய்ய அனுப்பி வைத்

தார் அவர். டாப்ரிவேயும் தன் மனைவியிடம் விடை பெற்றுப் பெற்றோர்களை வணங்கி, வாணிகத்தில் பெருஞ் செல்வம் திரட்டி வரவேண்டும் என்ற உறுதியுடன் பயணத்தைத் தொடங்கினான்.

டாப்ரிவே ஒரு துறைமுகத்தில் இறங்கியதும், அங்கே கண்ட காட்சி அவன் இளகிய மனத்தை உலுக்கியது. ஏழைகள் பலரை வீரர்கள் சிலர் பிடித்து இழுத்துக்கொண்டு சென்றனர். அவர்கள் மனைவிமார்களும், குழந்தைகளும் அழுதுகொண்டே அவ் வேழைகளைப் பின்பற்றிச் சென்றனர், டாப்ரிவே 'அவ் வேழைகளை ஏன் இழுத்துச் செல்கிறீர்கள்' என்று வீரர்களைக் கேட்டான். 'இவர்கள் வரி கொடாததால் இவர்களைச் சிறையில் அடைக்கக் கொண்டு செல்கிறோம்' என்றார்கள் வீரர்கள். அது கேட்டு மனமிரங்கிய டாப்ரிவே கப்பலிலுள்ள சரக்குகளை உடனே விற்று அவர்கள் கட்டவேண்டிய வரியைக் கொடுத்து அவர்களை விடுவிக்க எண்ணினான். அப்பொழுது அவன் தந்தையின் சீற்றம்கொண்ட முகம் அவன் முன் தோன்றியது. அவன் மனத்தில் இரக்கத்திற்கும் தந்தையின் சீற்றத்திற்கும் போராட்டம் மூண்டது. முடிவில் இரக்கமே வெற்றி பெற்றது. கப்பலிலுள்ள பொருள்களை விரைவில் விற்றுப் பணமாக்கி ஏழைகளின் வரிகளைக் கொடுத்து அவர்களை விடுவித்தான்; முன்போலவே வெறுங்கையனாய் வீடு திரும்பினான்.

இரண்டாவது தடவையும் பொருளை வீணாக்கி வந்த மகனைக் கண்ட தந்தையின் சீற்றம் கரைபுரண்டது. அவனையும் அவன் மனைவியையும் வீட்டை விட்டே துரத்தி விட்டார் அவர். நாட்கள் பல சென்ற பின் அவர் சினம் தணிந்து தம் மகனை அழைத்து, மூன்றாம் முறையாக வாணிகத்திற்கு அனுப்பினார். "மகனே, இதுவே கடைசிமுறை, உன் கப்பலில் உன் மனைவியின் உருவச்சிலை ஒன்று அமைத்துள்ளேன். முன்போலவே முட்டாள் தனமாகப் பொருளைப் பாழாக்கினால் உன் மனைவி உணவின்றி இறந்துவிடு

வாள் என்பதை எண்ணிக்கொள்" என்று கூறினர் அவர். டாப்ரிவே நீண்ட நாள் கடலில் பயணம் செய்து, பின் ஒரு துறைமுகத்தில் இறங்கினன்.

அங்கு ஒரு செல்வர் இவன் முன் தோன்றிக் "கப்பலின் முகப்பில் இருக்கும் உருவச்சிலை யாருடையது?" எனக் கேட்டார். "என் மனைவியின் உருவச்சிலை" என்ருன் டாப்ரிவே. உடனே அவர் டாப்ரிவேயைத் தம் அரசரிடம் அழைத்துச் சென்ருர். அரசர் துருக்கியர் திருடிச் சென்ற தம் அருமை மகளைப் பற்றிய செய்தி கிடைத்தது பற்றி, மகிழ்ச்சியடைந்தார். உடனே அரசிளங்குமரியை அழைத்து வர வேண்டி, அரசர் தம் அமைச்சரையும் டாப்ரிவேயுடன் அனுப்பினர்.

தன் ஊர் சென்ற டாப்ரிவே தன் பெற்றேரையும், மனைவியையும் அழைத்துக்கொண்டு திரும்பினன். நடுவழியில் அவனுடன் வந்த அமைச்சன், 'வணிகனுக்கு அரசவாழ்வா?' எனப் பொருமை கொண்டு, டாப்ரிவேயைக் கடலில் தள்ளிவிட்டான். டாப்ரிவே கடலில் நீந்திச் சென்று ஒரு பாறையை அடைந்தான். பல நாட்கள் பசியாலும் குளிராலும் வாடினன். ஒரு நாள் எங்கிருந்தோ ஓர் ஏழைச் செம்படவன் ஒரு படகுடன் இவனை வந்தடைந்தான். டாப்ரிவே தன்னைக் காப்பாற்றும்படி அவனைக் கெஞ்சினன். செம்படவன் 'என்ன கூலி கொடுப்பாய்' எனக் கேட்க, 'என்னிடம் ஏதும் இல்லையே' என்ருன் டாப்ரிவே. 'உனக்குக் கிடைப்பதில் பாதி தருவதாக வாக்களிப்பாய்' என்ருன் செம்படவன். டாப்ரிவேயும் ஒப்புக்கொண்டான்.

அதன்மேல் செம்படவன், டாப்ரிவேயைத் தன் படகில் ஏற்றிக்கொண்டுபோய்க் கரை சேர்த்தான். அதன் பின் பல நாட்கள் கிழிந்த ஆடையுடன் நல்ல உணவில்லாமல் துன்புற்று வழி நடந்து அரண்மனை வந்தடைந்தான் டாப்ரிவே. அவனைக் கண்டதும்

அரசர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். நடந்ததையெல்லாம் கேட்டு, அமைச்சரை அழைத்து, 'நீர் செய்தது மிகவும் கொடுமை. ஆயினும் உம்மை மன்னிக்கிறேன்' என்று கூறி அனுப்பினர். அமைச்சரும் தாம் செய்த கொடிய செயலுக்கு வருந்தினர்.

அரசர் டாப்ரிவேயை அரசனுக்க முடிவு செய்து அவ்வாறே அவனுக்கு முடி சூட்டினர். டாப்ரிவே அரசனகி அரியணையின் மேல் அமர்ந்ததும், அங்குச் செம்படவன் தோன்றி 'ஐயா, உமக்குக் கிடைப்பதில் பாதியை எனக்குக்' கொடுப்பதாக வாக்களித்தீரல்லவா?' என்று கேட்டான். டாப்ரிவே நினைத்தால், வீரர்களை ஏவி அவனைத் துரத்தியிருக்க முடியும்; ஆனல் அவன் அப்படிச் செய்யவில்லை. அவன் செம்படவனை நோக்கி "ஆம் வாக்களித்தது உண்மைதான். வாரும். இந்த நாட்டின் படம் இது. இதைப் பார்த்து நாட்டைப் பிரித்த பிறகு, கருவூலத்திற்குச் சென்று பணத்தைப் பங்கிடுவோம்" என்றான்.

அக்கணமே அச் செம்படவன், தன் வடிவம் மாறி, ஒளிவடிவம் பெற்று, "டாப்ரிவே! இரக்கம் உள்ளவரிடம் கடவுள் இரக்கம் கொள்வார்" என்று கூறி மறைந்தான். செம்படவனக வந்து அருள் செய்த கடவுளின் அருள் மொழிகளை மறவாது டாப்ரிவே, நீண்ட காலம் அந்நாட்டை அரசாண்டு வாழ்வானயினன்.

வினக்கள்

1. டாப்ரிவேயின் சிறப்பியல்புகள் யாவை?
2. டாப்ரிவே தன் பொருள்களைக் கொண்டு முதல் தடவை செய்ததென்ன?
3. டாப்ரிவே யாரை மணம் செய்து கொண்டான்?
4. இரண்டாம் முறை அவன் செய்ததென்ன?
5. மூன்ரும் முறை டாப்ரிவேயின் தந்தை கூறியதென்ன?
6. ரஷ்ய நாட்டமைச்சர் செய்த தீமை என்ன?
7. டாப்ரிவே, யாரால் எவ்வாறு போற்றப் படுகிருன்?
8. டாப்ரிவே, தன் சொல்லை எவ்வாறு காப்பாற்றினன்?
9. செம்படவனக வந்த கடவுள் முடிவில் கூறியதென்ன?

# 6. கரிகாலன்

பழங்காலத்தில் நம் தமிழகம் மூன்று நாடுகளாகப் பிரிக்கப்பட்டு இருந்தது. அம் மூன்று நாடுகளையும் சேரர், சோழர், பாண்டியர் என்ற மூன்று குலத் தமிழ் மன்னர் ஆண்டு வந்தனர். அவருள் சோழ மன்னர் ஆண்டு வந்த நாடு சோழ நாடு எனப் பெயர் பெற்றது. அது நீர்வளமும், நிலவளமும் நிரம்பப் பெற்றது. வற்றாது பெருக்கெடுத்தோடும் காவிரி பாய்வதால் அதனை நீர்நாடு என்றும், வளநாடு என்றும் கூறுவர் புலவர். அதனை ஆண்ட சோழர்களுக்கும் வளவர் என்ற சிறப்புப் பெயர் உண்டு.

சற்றேறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், சோழ நாட்டை இளஞ்சேட்சென்னி என்பவன் ஆண்டுவந்தான். இம் மன்னவன் மகனே புகழ் பெற்ற கரிகாலன் எனப் பெயர் கொண்ட திருமாவளவன். திருமாவளவன் சிறுவனாயிருக்கும்போது, இளஞ்சேட் சென்னி எதிர்பாராத வகையில் திடீரென்று இறந்தான். அவன் இறந்ததும், திருமாவளவனே பட்டத்துக்கு உரியவனாயிருந்தும், அரசுரிமைக்கு, மன்னவன் பங்காளிகள் பலர் போட்டியிட்டு எழுந்தனர். அவர்கள் ஒன்று சேர்ந்து அரசுரிமையைக் கைப்பற்றச் சூழ்ச்சிகள் செய்தனர்; நாட்டில் குழப்பத்தை விளைவித்தனர். குழப்பத்தைக் காரணமாகக்கொண்டு, சிறுவனால் அரசாள முடியாதென்று கூறி ஆட்சியைக் கைப்பற்றினர். அவர்கள் திருமாவளவன் சிறுவனாயினும் அவனே பட்டத்துக்குரியவனாதலின் அவனை ஒழிக்கத் திட்டமிட்டனர். முதலில் அவனைச் சிறை செய்து ஓரிடத்தில் மறைத்து வைத்தனர். சிறுவன் செய்வதறியாமல் சிறைப்பட்டிருந்தான்.

திருமாவளவனைப் பாதுகாக்கும் பொறுப்பை மேற்கொண்டிருந்த அவன் தாய்மாமனாகிய இரும்பிடர்த் தலையார் என்பவர் பெருவீரர். அவர் நுண்

ணறிவிற் சிறந்த அமைச்சராகவும் புலவராகவும் பாராட்டப் பெற்றவர். தம் பொறுப்பிலிருந்த திருமாவளவன் சிறைப்பட்டதை அறிந்த அவர், இனிப் பகைவர் தன்னையும் கொன்றுவிடுவர் எனக் கருதி மறைந்து வாழ்ந்தார். சோழநாட்டின் தலைநகரமாகிய உறையூரில் இரும்பிடர்த்தலையார் இல்லையென்றறிந்ததும் அரசைக் கைப்பற்றிய பங்காளிகள் துணிவு கொண்டு திட்டமிட்டபடியே திருமாவளவன் இருந்த சிறைக்குத் தீ வைத்தனர். 'தற்செயலாகப் பற்றிய தீயில் திருமாவளவன் சிக்கி இறந்துவிட்டான்' என்று கூறிவிடலாம் என்பது அவர்கள் எண்ணம்.

உறையூரை விட்டு நீங்கிக் கருவூரில் மறைந்து வாழ்ந்த இரும்பிடர்த்தலையார் தக்க துணைவர்களின் உதவியால் திருமாவளவனை விடுதலை செய்யும் வழிகளை மறைவில் செய்து கொண்டிருந்தார். சிறையில் தீப் பற்றியதும் திருமாவளவன் தப்பியோட முயன்றான். அப்பொழுது அவனைத் தடுத்த சிறைக் காவலரை வாளால் கொன்று, தக்க சமயத்தில் இரும்பிடர்த்தலையார் அனுப்பிய துணைவர்களுடன் வெளியேறினான். இதற்குள் தீ அவனைச் சூழ்ந்துகொண்டதால் அவன் கால்களில் ஒன்று தீயால் வெந்து கருகிவிட்டது. தீப்புண் ஆறியபிறகும் அந்தக்கால் கருமையாகவே இருந்த காரணத்தால் கரிகாலன் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றான்.

இவ்வாறு சிறையிலிருந்து தப்பிய கரிகாலன், கருவூரிலிருந்த இரும்பிடர்த்தலையாரை வந்தடைந்தான். அதன்பிறகு அவன் இருப்பிடத்தை எவரும் அறியாதபடி செய்து அவனைப் பாதுகாத்தார் இரும்பிடர்த்தலையார். பகைவர் பல இடத்தும் அவனைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாமல் சோர்ந்து கைவிட்டனர்.

இரும்பிடர்த் தலையார் கரிகாலனுக்கு அரசனுக்குரிய எல்லாக் கலைகளையும் கற்பித்தார். இயற்கை

யிலேயே எல்லாச் சிறப்பும் அமைந்த கரிகாலன் இரும்பிடர்த்தலையார் அளித்த பயிற்சிகளால் பெரு வீரனாகவும், பேரறிஞனாகவும் திகழ்ந்தான். கரிகாலன் பகைவரை வென்றொழித்து நாட்டைக் கைப்பற்றி நன் முறையில் ஆட்சி புரியும் தகுதிகளை நன்கு பெற்றுவிட்டான் என்பதை யுணர்ந்த இரும்பிடர்த் தலையார் மகிழ்ந்தார். இனி அவனைச் சோழ நாட்டரி யணையில் அமர்த்துவதே தமக்குள்ள பொறுப்பென அறிந்து அதற்கான வேலைகளை மேற்கொண்டார்.

கரிகாலனைச் சிறைப்படுத்திய பொழுதே உறை யூர் மக்கள், அரசைக் கைப்பற்றியிருந்த பங்காளிகள் மேல் வெறுப்புக் கொண்டனர். கரிகாலன் தீயில் மாண்டான் என்ற செய்தி கேட்டதும் அவர்கள் பங்காளிகளின் அரசை ஒழித்துவிட வேண்டுமென்று முடிவு கட்டினர். இரும்பிடர்த்தலையாரின் துணைவர் களும் நாடெங்கும் பங்காளிகளுக்கு எதிராகக் குழப்பம் விளைவித்தனர். ஒருநாள் மக்கள் திரண்டெழுந்தனர். படை வீரர்களும் அவர்களுடன் சேர்ந்து கொண்ட னர். அவ்வளவில் பங்காளிகள் ஓட்டம் பிடித்தனர்.

அதன் மேல் அறிஞர் பலர் ஒன்றுகூடி அரசனைத் தேர்ந்தெடுக்க முடிவு செய்தனர். அக்கால வழக்கப் படி பட்டத்து யானையின் கையில் மாலையைக் கொடுத் தனுப்பி வைத்தனர். அது யார் கழுத்தில் மாலையைச் சூட்டுகிறதோ அவரையே அரசராகக் கொள்வது அக்கால மரபு.

யானை உறையூர் முழுவதும் சுற்றியது. எவர் கழுத்திலும் அது மாலையைப் போடவில்லை. வீரர் களும், அமைச்சர்களும். பொதுமக்கள் பலரும் அதன் பின்னே சென்றனர். யானை உறையூரை விட்டு வெளியேறியது. எல்லோரும் வியப்புற்றனர். அது எவ்விடத்தும் நில்லாமல் கருவூரை வந்தடைந்தது. பல தெருக்களைக் கடந்து திருமாவளவன் மறைந்து வாழ்ந்த வீதியை நெருங்கியது. இதற்குள் இரும்

பிடர்த் தலையார் உறையூரில் நிகழ்ந்த செய்திகளை ஒற்றர்கள் வாயிலாக அறிந்து கொண்டாராதலால். இனிக் கரிகாலனைக் கொல்ல எவராலும் ஆகாது என உணர்ந்து அவன் விருப்பம்போல் உலாவ அனுமதி அளித்தார்.

கரிகாலன் வீதியில் எழுந்த ஆரவாரம் என்ன வென்றறிய வெளியேவந்து நின்றான். அவனைக் கண்டதும் யானை விரைந்தோடி வந்து அவன் கழுத்தில் மாலையைச் சூட்டி அவனைப் பணிந்து நின்றது. அப்பொழுது இரும்பிடர்த் தலையாரும் வெளியே வந்தார். அவரைக் கண்டதும் வீரர்களும், பொது மக்களும் தங்கள் அரசன் மகனையே யானை தேர்ந்தெடுத்தது என உணர்ந்து மகிழ்ச்சிப் பெருக்கால் ஆரவாரம் செய்தனர். அரசிளங் குமரன் பகைவர் சூழ்ச்சியால் இறக்கவில்லையென உணர்ந்து அவனை வாழ்த்தினர்.

அதன்பின் கரிகாலன் அந்த யானையின் மேல் ஏறிக்கொண்டு யாவரும் சூழ்ந்துவர உறையூரடைந்து நல்ல நாள் ஒன்றில் சோழநாட்டரசனாக முடி சூட்டிக் கொண்டான். கரிகாலன் மீண்டும் வந்ததைக் கேள்வியுற்ற பகைவர் சோழநாட்டை விட்டே ஓடிக் காடுகளில் புகுந்து மறைந்தனர். கரிகாலன் அரசுரிமை பெற்றதும் தன் படை வீரருக்குத் தக்க பயிற்சியளித்துப் போரில் நிகரற்ற பெரும்படை யொன்றை அமைத்துக்கொண்டான். முதலில் உள் நாட்டுப் பகைவரை ஒழிக்கப் புறப்பட்டான். பலர் கரிகாலன் வீரப் போர் கண்டு அவனுக்கடங்கி வாழ்ந்தனர். சிலர் அவன் வாளுக்கு இரையாயினர். இன்னும் சிலர் காடுகளிலோ, வேறு நாடுகளிலோ குடியேறி உயிர் பிழைத்தனர்.

கரிகாலன் அயல் நாடுகளையும் வென்று தன் ஆட்சியைப் பரப்பினான். தெற்கே சிங்களத்தையும் வென்றான். வடக்கே இமயம் வரை படையெடுத்துச் சென்று பல அரசர்களிடம் கப்பம் பெற்று இமயமலை

யில் சோழ நாட்டுக் கொடியாகிய புலிக்கொடியைப் பொறித்து மீண்டான். அதன் பிறகு தன் நாட்டின் முன்னேற்றத்திற் கருத்தைச் செலுத்தினன். புலவர்க்கும் பாணர்க்கும் கூத்தர்க்கும் வரையாது பரிசு வழங்கித் தமிழ் மொழியையும் கலைகளையும் வளர்த்தான். காவிரிக்குக் கரையமைத்துப் பல அணைகளைக் கட்டி நீர்வளம் செழிக்கச் செய்தான். இவ்வாறு நெடுங்காலம் சீரும் சிறப்பும் பெருக அரசாண்டான் கரிகாலன்.

## வினுக்கள்

1. பழந் தமிழகத்தை ஆண்ட மன்னர் யாவர் ?
2. சோழநாட்டின் சிறப்புப் பெயர்கள் யாவை ?
3. இளஞ்சேட் சென்னி இறந்ததும் நாட்டில் குழப்பம் உண்டானதேன் ?
4. பகைவர் திருமா வளவனை ஒழிக்கச் செய்த சூழ்ச்சி என்ன ?
5. இரும்பிடர்த் தலையார் யார் ? அவர் செய்தது என்ன ?
6. கரிகாலன் என்ற பெயர் எவ்வாறு ஏற்பட்டது ?
7. பங்காளிகள் ஆட்சி எவ்வாறு ஒழிந்தது ?
8. உறையூர்ப் பெருமக்கள் அரசனைத் தேர்ந்தெடுக்க என்ன செய்தார்கள் ?
9. கரிகாலன் அரசுரிமை பெற்றது எவ்வாறு ?
10. கரிகாலன் அரசுரிமை பெற்றதும் செய்த வீரச்செயல்கள் யாவை ?
11. கரிகாலன் தன் நாட்டின் முன்னேற்றத்திற்குச் செய்தன யாவை ?

# 7. ரிப்வான் விங்கிள்

வட அமெரிக்காவைச் சேர்ந்த ஒரு சிற்றூரில் ரிப்வான் விங்கிள் என்னும் பெயர் கொண்ட ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் தனக்கென ஒரு தொழிலே யும் செய்ய எண்ணுமல் முன்னோர் தேடி வைத்த செல் வத்தைச் செலவு செய்து வந்தான். அவனுடைய வாக்கையே மிகவும் வேடிக்கையானது. தன் வீட் டிற்கு வேண்டிய வேலைகளில் கருத்தைச் செலுத்த மாட்டான். பிறர்க்கு உதவியாக அவர்களுடைய வேலைகளைச் செய்வதில் முனைந்து நிற்பான். தனக் கும் தன் குடும்பத்தார்க்கும் உணவளிக்கும் தன் முன் னோர் தேடி வைத்த வயல் வெளிகளைக் கண்ணுலும் பார்க்க மாட்டான். பிறருடைய தோட்டங்களில் வேலை செய்ய ஓடுவான். தன் வீட்டிற்குக் கடைகளுக் குப்போய்ப் பொருள்கள் வாங்கி வரமாட்டான். ஊரி லுள்ளவர்க்காகச் சென்று பொருள்களைச் சுமந்து செல்வதில் உற்சாகம் கொள்வான். தன் குழந்தைகளை எடுத்துக் கொஞ்சமாட்டான். ஆனால் ஊர்க் குழந்தைக ளுடன் விளையாடி மகிழ்வான். இப்படிப் பொதுநலத் தொண்டு செய்வதில் அவனுக்குப் பற்று மிகுதி. அவன் குடும்ப வேலைகளை அவன் மனைவியே நடத்தி வந்தாள்.

தன் வீட்டிற்கு உதவாமல் சோம்பேறியாகவும் மற்றவர் வேலைகளில் சுறுசுறுப்புடையவனுகவும் வாழ்ந்தால் யாருக்குத்தான் கோபம் வராது? அவன் மனைவி அவனை அடிக்கடி ஏசுவாள். ஆனால் அவ ளுக்கு மறுமொழி ஒன்றும் சொல்லமாட்டான் அவன். அவள் தன்னைக் கடிந்து பேசும் பொழுது துப்பாக்கி யைத் தூக்கிக்கொண்டு ஊருக்கருகிலுள்ள காட்டுக்கு

வேட்டையாடச் செல்வான். அவனை விட்டு நீங்காத நிழல்போல் அவன் வளர்த்த நாய் ஒன்று அவனைப் பின் தொடர்ந்து செல்லும். அந்த நாய் ஒன்றே அவனுக்கு உறு துணையாக இருந்தது. அவன் அங்குள்ள மலைச்சாரல் பக்கம் சென்று அணில் வேட்டையாடுவான். அவன் வேட்டையாடுவதிலும் வெற்றி தோல்விகளைப் பொருட்படுத்துவதில்லை; துப்பாக்கியால் சுடுவானேயொழிய எந்த அணிலையும் அடித்து வீழ்த்தமாட்டான்.

ஒரு நாள் காலையில் வேட்டைக்குப் புறப்பட்டான் விங்கிள். பகலெல்லாம் பல இடங்களிலும் அலைந்து வேட்டையாடினன். முடிவில் களைப்படைந்து ஒரு மரத்தடியில் சிறிது நேரம் படுத்துறங்கினன். அவன் விழித்தெழுந்த பொழுது சூரியன் மறையும் நேரமாயிற்று. அச்சமயம் பிசுபிசுவென்று மழையும் பொழியத் தொடங்கியது. சிறிது நேரத்தில் மழை நின்றதும் விங்கிள் தன் நாயுடன் வீடு நோக்கி வந்துகொண்டிருந்தான். இருட்டுவதற்கு முன் வீடு போய்ச் சேர வேண்டும் என்ற எண்ணமில்லாமல் மெல்ல நடந்துகொண்டிருந்தான்.

மலைச் சரிவில் அவன் இறங்கி வந்துகொண்டிருக்கும் பொழுது, அவன் பெயரைச் சொல்லி யாரோ கூவி அழைப்பது போல் இருந்தது. தன்னைக் கூப்பிடுவது யார் என்று அறிய அத்திசையை நோக்கினன் விங்கிள். அங்கே அவன் கண்ட விந்தையான காட்சியால் பெருவியப்படைந்தான். அவன் அதுவரை பார்த்திராத ஒரு விந்தைக் குள்ளன் பெரிய பானையொன்றைச் சுமக்க முடியாமல் சுமந்து வருவதைக் கண்டான். அந்தக் குள்ளனே தன்னைக்

கூப்பிட்டவன் என உணர்ந்தான் விங்கிள். அக்குள்ளன் விங்கிளின் அருகில் வந்து வணக்கம் செய்து "ரிப்வான் விங்கிள், நீயே எனக்கு உற்ற துணைவன். ஊராருக்கெல்லாம் உதவி செய்யும் நீ எனக்கும் சிறு உதவி செய்வாய் என்று நம்புகிறேன். இந்தப் பெரிய பானையை என்னால் சுமந்து செல்ல முடியவில்லை. அன்பு கூர்ந்து எனக்காக இதைத் தூக்கிக் கொண்டு வரவேண்டும்" என்று கூறி வேண்டினன். விங்கிள் உடனே குள்ளன் பானையை வாங்கித் தன் தலைமேல் வைத்து அவன் பின்னே நடந்தான்.

குள்ளனும் ரிப்வான் விங்கிளும் போய்க்கொண்டே இருந்தார்கள். நாயும் விடாது பின் தொடர்ந்து சென்றது. நெடுந்தூரம் சென்ற பிறகுதான் விங்கிள் தான் இதுவரை சென்றறியாத புது வழியில் சென்று கொண்டிருப்பதை உணர்ந்தான். சிறிது நேரத்தில் அவர்கள் இருவரும் ஒரு மலைக் குகையை அடைந்தனர். அந்தக் குகையில் இக்குள்ளனைப் போலவே பல குள்ளர்கள் ஆடிப் பாடிக் கொண்டிருந்தார்கள். விங்கிளை அழைத்து வந்த குள்ளனும் அவர்களுடன் சேர்ந்து ஆடத் தொடங்கினன். ரிப்வான் விங்கிள் பானையைக் கீழே இறக்கி ஓரிடத்தில் வைத்தான். அந்தப் பானையில் நறுமணம் கமழும் பழங்களின் சாறு நிறைய இருந்தது.

குகைக்குள் சென்ற விங்கிள் குள்ளர்களைக் கண்டதும் முதலில் சிறிது திகைத்தான். அவர்கள் சிரித்து விளையாடி ஆடிப்பாடுவது கண்டு மனம் தெளிந்தான். குள்ளர்கள் பானையிலிருந்த பழச் சாற்றைத் தாங்களும் குடித்து விங்கிளுக்கும் கொடுத்துப் பருகச் சொன்னர்கள். விங்கிள் அதன் நறு

மணத்தைக் கண்டு விருப்புடன் பருகினுன்; அது மிக்க சுவையுடன் இருந்ததினுல் மேலும் மேலும் குடித்தான். அதன்பின் விங்கிள் தன்னை மறந்தான். பழச்சாற்றின் மயக்கத்தால் அப்படியே படுத்து உறங்கிவிட்டான்.

திடீரென்று ரிப்வான் விங்கிள் விழித்தெழுந்தான். அவன் எழும்போது காலைக்கதிரவன் கீழ்த்திசையில் ஒளிபரப்பி மேலே வந்துகொண்டிருந்தான். விங்கிள் கண்களைக் கசக்கிக்கொண்டே "இரவு முழுவதும் இங்கேயே படுத்து உறங்கிவிட்டேனே! இங்கிருந்த குள்ளர்களையும் காணவில்லையே! குகைக்குள்ளே படுத்த நான் இங்கே எப்படி வந்தேன்? அந்தக் குள்ளர்கள் செய்த வேலையாகத்தான் இருக்க வேண்டும்; என்னை விட்டு எங்கும் செல்லாத நாயையும் காணவில்லையே" என்றெல்லாம் தனக்குள் எண்ணமிட்டுக்கொண்டே நாயைப் பெயர் சொல்லிக் கூவி அழைத்தான். அவன் குரல் அவனுக்கே ஒருமாதிரி கேட்டது. 'ஐயோ வீட்டில் மனைவி கோபம் கொள்வாளே' என்று எண்ணி எழுந்து செல்ல முயன்ருன்.

விங்கிள் விரும்பியபடி எழுந்திருக்க முடியவில்லை. கால்கள் உணர்ச்சியிழந்தவை போல இருந்தன. உடம்பெல்லாம் வலித்தது. தன் உடம்பில் ஏற்பட்ட மாறுதல்களை உணர்ந்து வியப்படைந்தான். தோலெல்லாம் சுருக்கம் விழுந்திருப்பது கண்டு திகைத்தான். முகத்தில் நீண்ட தாடி வளர்ந்திருப்பதைத் தடவிப் பார்த்தான். ஒரே இரவிற்குள் இவ்வளவு மாறுதல்கள் எப்படி நேர்ந்தன? இவையெல்லாம் அந்தக் குள்ளர்களின் மாயச் செயல்களாயிருக்குமோ என்று ஐயம் கொண்டான். மெல்ல எழுந்து வீடு நோக்கிப் புறப்பட்டான்.

புறப்படுமுன் தன் துப்பாக்கியைப் பற்றிய நினைவு வந்து அதைத் தேடினன் விங்கிள். துப்பாக்கியின் மேல் பகுதியொன்றும் இல்லாமல் வெறும் இரும்புக் குழாய் மட்டும் அங்கே கிடப்பதைக் கண்டான். மேலும் திகைப்படைந்து அதைக் கையில் எடுத்துக் கொண்டு வீடு நோக்கிச் சென்றான்.

கந்தை உடையுடன் தாடியும் மீசையுமாகத் துருப் பிடித்த துப்பாக்கிக் குழாயைப் பிடித்துக்கொண்டு விங்கிள் ஊரை நெருங்கியதும் சிறுவர்கள் அவனைச் சூழ்ந்துகொண்டு 'தாத்தா! தாடித்தாத்தா!' என்று கூவி ஆரவாரம் செய்தார்கள். எதிரே வந்த யாரும் அவனைத் தெரிந்துகொள்ளவில்லை. அவன் தன் வீடு இருந்த இடத்தை அடைந்ததும் திடுக்கிட்டான். அவன் வீடு இடிந்து பாழாகிக் கிடந்தது. இவற்றிற் கெல்லாம் காரணம் என்னவென்றே அவனுக்குத் தோன்றவில்லை.

ரிப்வான் விங்கிள் அங்கு வந்தவர்களைப் பார்த்து 'இவ் வீட்டில் வாழ்ந்த என் மனைவியும் மக்களும் எங்கே?' என்று கேட்டான். அவர்கள் இவன் யாரோ பைத்தியக்காரன் என்றெண்ணிக் கைகொட்டிச் சிரித் தனர். விங்கிளுக்கு வருத்தமும் கோபமும் மிகுந்தன. அங்கிருந்தவர்களில் வயதானவர் சிலரை நோக்கி "இவ்வீட்டில் ரிப்வான் விங்கிள் என்று ஒருவன் இருந் தானே அவனை உங்களுக்குத் தெரியாதா?" என்றான். ஒரு பெரியவர் "ஆம் இருபது ஆண்டுகளுக்கு முன் அப்பெயர் கொண்ட ஒருவர் இருந்தார். ஒருநாள் வேட்டைக்குப் போனவர் திரும்பி வரவேயில்லை. சில ஆண்டுகளுக்குப் பின் அவருடைய மனைவியும் மக்க ளும் வேறு இடம் போய்விட்டார்கள். அவருடைய

மனைவி இறந்து விட்டாள். அவருடைய மக்களில் மூத்த பெண் மட்டும் இத்தெருவில் அதோ அந்த வீட்டில் வாழ்ந்து வருகிறாள். அதோ நிற்கும் சிறுவன் அவருடைய பெண் வயிற்றுப் பேரன்தான்" என்று விவரமாகக் கூறினார்.

இவ்வரலாற்றைக் கேட்ட ரிப்வான் விங்கிளுக்கு ஒன்றும் புரியவில்லை. இதற்குள் அச்சிறுவனின் தாயும் அங்கு வந்து சேர்ந்தாள். அவள் விங்கிளை உற்று நோக்கித் தன் தந்தைதான் என்று அடையாளம் கண்டுகொண்டாள். 'ஆ, தந்தையே! இத்தனை ஆண்டுகளாக எங்கே சென்றிருந்தீர்கள்?' என்று கூவிப் புலம்பினாள். அப்பொழுதுதான் ரிப்வான் விங்கிள், தான் இருபது ஆண்டுகள் உறங்கிக் கிடந்ததை உணர்ந்து கொண்டான். அவன் கூறிய நிகழ்ச்சிகளைக் கேட்டதும் அங்கிருந்தவர் அனைவரும் வியப்புஅடைந்தனர். அதன்மேல் ரிப்வான் விங்கிள் தன் மகள் வீட்டை அடைந்து அவளுடன் வாழ்ந்து வரலானான்.

## வினாக்கள்

1. ரிப்வான் விங்கிள் எவ்வாறு தன் வாழ்க்கையை நடத்தி வந்தான்?
2. அவன் மனைவி அவனைக் கடிந்துகொள்ளும்பொழுது அவன் என்ன செய்வான்?
3. மலைச் சரிவில் அவன் கண்ட விந்தைக் காட்சி என்ன?
4. குள்ளன் விங்கிளை வேண்டிக்கொண்டதென்ன?
5. குகையில் அவன் கண்ட காட்சி என்ன?
6. விங்கிள் மயங்கி உறங்கியதேன்?
7. விழித்தெழுந்ததும் அவன் திகைக்குமாறு என்ன மாறுதல்களைக் கண்டான்?
8. ஊரில் அவன் கண்ட காட்சி என்ன?
9. விங்கிள் எவ்வாறு உண்மையுணர்ந்தான்?

# 8. வில் வீரன் வில்லியம் தெல்

ஐரோப்பாவில் சுவிட்சர்லாந்து என்னும் ஒரு நாடு உள்ளது. அது மலைப்பாங்கானது அந்நாட்டு மக்கள் உடல் வலிமையுள்ளவர்கள்; நாட்டுப் பற்று மிக்கவர் கள். அவர்களில் வில்லியம் தெல் என்னும் புகழ்பெற்ற வில்வீரன் ஒருவன் இருந்தான். அவன் குறிபார்த்து அம்பு எய்வதில் இணையற்றவன்.

அவன் வாழ்ந்த காலத்தில் அந்த நாடு ஆஸ்திரியா நாட்டின்கீழ் அடிமைப்பட்டிருந்தது. அந்த நாட்டினர் சுவிட்சர்லாந்து மக்களை அடக்கி ஆண்டு வந்தனர். அதனால் அம்மக்கள் ஆத்திரம் கொண்டனர்; அடிமைத் தளையை அறுத்தெறிய ஆவல் கொண்டிருந்தனர்.

ஆஸ்திரிய அரசாங்கத்தின் பிரதிநிதியாக சுவிட் சர்லாந்தில் இருந்தவன் ஜெஸ்லர் என்னும் கொடுங் கோலன். அவன் பலவகையிலும் மக்களைத் துன் புறுத்தியும் இழிவுபடுத்தியும் வந்தான். அவன் அந்த நாட்டின் ஊரி என்ற பகுதியிலுள்ள ஆல்டிராப் என்ற நகரில் தங்கியிருந்தான். அந்த நகரம் வாணிகத் திற்குப் பேர்போனது. அந்நகரத்தின் கடை வீதி மிகப் பெரியது. பல ஊர்களிலிருந்தும் மக்கள் அக் கடை வீதிக்கு வந்து பண்டங்களை வாங்கிச் செல்வர். அக்கடைவீதியின் ஒருபுறத்தில், ஜெஸ்லர் என்பவன் நீண்ட கம்பம் ஒன்றை நட்டு, அதன்மேல் தன் தொப்பியை வைத்து, அங்கு வருபவர் யாவரும் அத் தொப்பிக்கு வணக்கம் செய்து போகும்படி ஆணை யிட்டிருந்தான். அவ்வாறு வணங்க மறுத்தவர்களைச் சுட்டுக் கொல்லுமாறு படைவீரர் இருவரை அங்கு நிறுத்தியிருந்தான். புதியவர் யாரேனும் வருவாரா யின், அவ்வீரருள் ஒருவன் 'தொப்பியை வணங்குங் கள்' என்று உரக்கக் கூறுவான். இவ்வாறு அங்கு நடைபெற்று வந்தது.

வீரன் வில்லியம் ஒருநாள் தான் வேட்டையாடிய மான் தோலை விற்றுத் தன் மக்களுக்கு வேண்டும் ஆடைகளை வாங்குவதற்காக அக்கடை வீதிக்கு வந்தான். அவனுடன் அவன் மகனும் வந்தான். மான் தோலை விற்று வாங்க வேண்டிய பொருள்களை வாங்கியபின் திரும்பிச் செல்லும் பொழுது கம்பத்தைக் காத்துநின்ற வீரன் அவனைத் தடுத்து நிறுத்தினான். அவன் வில்லியத்திற்குக் கம்பத்தைக் காட்டி 'இதை வணங்காது போனால் சுட்டுக் கொல்லப்படுவாய்' என்று கூறினான். வில்லியம் தனக்குள் பொங்கி எழுந்த கோபத்தை அடக்கிக்கொண்டு, அந்த வீரனையும் அவன் காட்டிய கம்பத்தையும் ஏற இறங்கப் பார்த்துவிட்டு, அமைதியாக 'வீரனே இதை வணங்காது செல்வது குற்றமா?' என்று கேட்டான். அவ்வீரன் 'ஆம், இந்நாடாளும் தலைவனை மதியாதது குற்றம்' எனக் கூறினான்.

இச்சமயம் ஜெஸ்லர் அங்கே தோன்றினான். அவன் 'ஆஸ்திரிய நாட்டு அதிகார அடையாளத்தை வணங்க மறுப்பவன் யாவன்?' என்று கேட்டுக்கொண்டே வந்தான். அவனைக் கண்டதும் மக்கள் நடுங்கினர். அங்காடித் தெருவில் அமைதி குடிகொண்டது. அப்பொழுது வில்லியம் தெல்லின் மகன் அவனருகே ஓடி வந்தான். ஜெஸ்லர் அவனைக் காட்டி 'இவன் உன் மகனா' என்று கேட்டான். வில்லியம் 'ஆம்' என்று விடை கூறினான். அதன்மேல் அக்கல் நெஞ்சனாகிய ஜெஸ்லர் 'நீ என் ஆணையை மீறியது ஆஸ்திரிய அரசர் ஆணையை மீறியதாகும். அரசர் ஆணையை மீறுபவன் தூக்கில் இடப்படவேண்டும். ஆனால் நான் உன்னை மன்னித்துவிட நினைக்கிறேன். அதற்கு ஒரு கட்டுப்பாடு விதிக்கிறேன். உன் மகன் தலையில் ஓர் ஆப்பிள் பழத்தை வைக்கச் சொல்வேன். அதோ அந்த மரத்தடியில் அவன் நிற்பான். நீ அம்பால் அப்பழத்தை இரு துண்டுகளாக்கவேண்டும். அவ்வாறு செய்தால் உனக்கு விடுதலை கிடைக்கும். தவறினால் நீ கொல்லப்படுவாய்' என்றான்.

இதைக் கேட்ட மக்கள் நடுங்கினர். வீரன் வில்லியம் கல்லாய்ச் சமைந்து நின்ருன். அவன் கண்கள் கலங்கின. உடல் நடுங்கியது. தன் அருமை மகன் தலைமேல் ஆப்பிள் பழத்தை வைத்து அம்பு எய்ய எந்தத் தந்தைக்குத் துணிவு பிறக்கும்? குறி சிறிது தவறினுலும் பையன் துடித்துச் சாவது திண்ணம். தன் மகனைத் தன் கையாலேயே கொலை செய்யத் திட்டமிட்ட கொடியோன் ஆணை கேட்ட தெல் அடைந்த கோபத்திற்கு எல்லையே இல்லை. சிறிது நேரம் ஒன்றும் பேசாமல் நின்ருன்.

உடனே அக்கொடுங்கோலன் "ஏன் தயங்குகிருய்? 'சிறந்த வில் வீரன்' என்று எங்கும் உன்னைப் புகழ்கிருர்களே! எங்கே உன் திறமையைப் பார்ப்போம்" எனச் சொல்லி நகைத்தான். நடந்தவற்றைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த சிறுவன் தன் தந்தையை நோக்கி, 'அப்பா! நான் அசையாமல் நிற்கிறேன். நீ மனம் கலங்காமல் ஆப்பிளை எய்து விடு' என்ருன். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?

தெல் நடுங்கும் கைகளுடன் இரண்டு அம்புகளைக் கையில் எடுத்து ஓர் அம்பை வைத்து வில்லை வளைத்து மைந்தனை நோக்கினுன். அவ்வளவில் அவன் முகத்தில் படர்ந்திருந்த துயரம் விலகியது. வீரம் ஒளி வீசியது. அதுவரை நடுங்கிய கைகளில் உறுதி காணப்பட்டது. தெல்லின் கண்களுக்குப் பழம் மட்டுமே தெரிந்தது. அம்பை எய்துவிட்டான் தெல். மறுகணம் ஆப்பிள் பழம் இரு துண்டுகளாகப் பையன் இருபுறத்தும் விழுந்தது. மக்கள் ஜெஸ்லரையும் மறந்து ஆரவாரம் செய்தனர்.

ஜெஸ்லரும் 'நன்றே செய்தாய்' எனத் தெல்லைப் பாராட்டி விட்டு 'இரண்டு அம்புகள் எடுத்தது ஏன்?' எனக் கேட்டான், அதற்கு வில்லியம் 'முதல் அம்பு குறி தவறி என் மகனைக் கொல்லுமானுல் அடுத்த அம்பை உன் மார்பில் பாய்ச்சவே எடுத்தேன்' என

அஞ்சாது கூறினன். ஜெஸ்லர் 'ஓ அப்படியா? நான் முன்னே கூறியதுபோல் உன்னைக் கொல்லாமல் உயிர்ப்பிச்சை அளிக்கிறேன். ஆ ன ல் இப்பொழுது கூறியதற்காக உன்னைச் சிறையில் அடைக்க உத்தர விடுகிறேன்' எனக் கூறினன். அவனைச் சேர்ந்த வீரர்கள் உடனே வில்லியம் தெல்லைப் பிடித்து விலங்கிட்டு இழுத்துச் சென்றனர். சிறுவன் அங்கே நில்லாமல் வீட்டை நோக்கி ஓடினன்.

சிறைச்சாலையை அடையுமுன் லூரி என்ற ஏரியைக் கடந்தாக வேண்டும். ஆகவே ஜெஸ்லரும் வீரர்களும் வில்லியத்துடன் படகில் ஏறினர். அவ்வேரியில் படகோட்டுவது எளிதன்று. அதிலும் புயல் காற்றினல் கொந்தளிப்பு ஏற்பட்டால் ஓடம் ஓட்டுவது மிகவும் அருமை. படகு புறப்பட்ட சிறிது நேரத்தில் புயல் எழுந்தது. பேரலைகள் பொங்கி எழுந்தன. வீரர்களும் ஜெஸ்லரும் கலங்கினர். அச்சமயம் தங்களைக் காப்பாற்ற வல்லவன் வில்லியம் தெல்லே என உணர்ந்து அவன் விலங்குகளை அகற்றிப் படகோட்டுமாறு பணித்தனர். வில்லியம் படகைத தான் விரும்பிய திசையில் செலுத்தினன். படகு கரையை நெருங்கியதும் தெல் திடீரென்று தாவிக்குதித்து ஒரு பாறை மீது ஏறித் தப்பி ஓடினன். அவ்வாறு தப்பிய தெல் ஒரு பாறையின் ஓரத்தில் மறைந்து நின்றன்.

ஜெஸ்லர் தெல்லைத் தப்ப விட்டதற்காகத் தன் வீரர்களைக் கடிந்து கொண்டு படகை விட்டிறங்கி அவ்வழியே வந்துகொண்டிருந்தான். "நான் திரும்பி ஆல்டிராப் நகரம் சென்றும் தெல்லின் குடும்பத்தை அடியோடு அழிப்பேன்' எனக் கூறிக்கொண்டே வந்தான் ஜெஸ்லர். அதைக் கேட்டு மறைவில் நின்ற தெல் ' நீ இனித் திரும்புவது ஏது?' எனக் கூறிக் கொண்டே ஜெஸ்லரை நோக்கி அம்பை எய்தான். ஜெஸ்லர் மடிந்து விழுந்தான். வீரர்கள் அஞ்சி ஓடினர்.

அதன்பின் வில்லியம் தெல் தன் நாட்டு மக்களை ஊக்குவித்து ஆஸ்திரியர்களை விரட்டச் செய்தான். மீண்டும் சுவிட்சர்லாந்து உரிமை பெற்றது. அதன் பிறகு அவன் மலைநாட்டிற்குச் சென்று எளிய வாழ்வையே மேற்கொண்டு வாழ்ந்தான்.

## வினாக்கள்

1. சுவிட்சர்லாந்து நாடு பற்றிச் சிறு குறிப்பு வரைக.
2. ஜெஸ்லரின் கொடுங்கோன்மை பற்றிக் கூறுக.
3. ஜெஸ்லர் இட்ட ஆணை என்ன ?
4. வில்லியம் தெல்லுக்கு ஜெஸ்லர் விதித்த கட்டுப்பாடு என்ன ?
5. வில்லியம் மனம் கலங்கியதேன் ?
6. வில்லியம் தெல்லின் மகன் கூறியதென்ன ?
7. தெல் இரண்டாவது அம்பை எடுத்த காரணம் என்ன என்று கூறினான் ?
8. தெல் எவ்வாறு தப்பிச் சென்றான் ?
9. தெல் ஜெஸ்லரை எவ்வாறு கொன்றான் ?
10. தெல் தன் நாடு உரிமை பெறச் செய்ததென்ன?

---

# 9. பொய்யின் விளைவு

பாரசீக நாட்டில் ரஸ்டம் என்னும் ஓர் ஒப்பற்ற மாவீரன் இருந்தான். அவன் தலைமை தாங்கி நடத்திய எந்தப் போரிலும் தோல்வி கண்டதே இல்லை. அவன் புகழ் பாரசீக நாட்டில் மட்டுமின்றி வேறு பல நாடுகளிலும் பரவியது.

ஒரு பொழுது அவன் தார்த்தாரிய நாட்டின் பக்கம் வந்தான்; அங்கு வேட்டையாட வந்த சிற்றரசனைக் கண்டு அவனுடன் உரையாடி மகிழ்ந்தான்; அவன் அழைப்பினை ஏற்று அவன் அரண்மனைக்குச் சென்றான். அச்சிற்றரசனும் புகழ் வாய்ந்த ரஸ்டத்தை நன்கு வரவேற்று விருந்தளித்தான். அதனால் ரஸ்டம் சில நாட்கள் அங்குத் தங்க நேர்ந்தது.

அச்சிற்றரசனுக்கு அழகிய பெண் ஒருத்தி இருந்தாள். அவள் ஒப்பற்ற வீரனாகிய ரஸ்டத்தை மணக்க விரும்பினாள். ரஸ்டமும் அவளை மணந்துகொள்ள இசைந்தான். மணவினை சிறப்பாக நடந்தேறியது. ரஸ்டம் சில மாதங்கள் அங்குத் தங்கியபின் தன் நாடு திரும்பினான்.

ரஸ்டம் தன் நாடு திரும்பிய சில மாதங்களில் அவன் மனைவி அழகிய ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்தாள், ஆண் குழந்தை பிறந்ததைத் தன் கணவர் அறிந்தால், அக்குழந்தையை இளமையிலிருந்தே போர் வீரனாக்க நினைத்துத் தன்னிடமிருந்து பிரித்து விடுவாரே என்று எண்ணி ஏங்கினாள். அதனால் ஒரு பெண் குழந்தை பிறந்திருப்பதாக ஒரு பொய்ச் செய்தியை ரஸ்டத்திற்குச் சொல்லி அனுப்பினாள். அது கேட்ட ரஸ்டம் 'வீரமகன் பிறக்கவில்லையே' என மனம் வாடினான். பெண் மகவைப் பார்க்கவும் விரும்பாது தன் நாட்டிலேயே தங்கி விட்டான்.

நாட்கள் பல சென்றன. ரஸ்டம் என்ற பெயரைக் கேட்டவுடன் பகைவர் நடுங்கினர். அதனால், பகைவர் பாரசீக நாட்டின் எல்லையைப் பார்க்கவும் அஞ்சினர். நாட்டில் அமைதி குடிகொண்டது. அதனால் போர் வீரனாகிய ரஸ்டத்தைப் பாரசீக மன்னன் மதிக்க வில்லை. அதுகண்ட ரஸ்டம் சோர்வடைந்தான். வாழ்க்கையில் வெறுப்புற்று நாட்டை விட்டகன்று காட்டகம் சேர்ந்து துறவிபோல வாழ்ந்து வருவா னாயினான்.

ரஸ்டத்தின் மகன் தாயிடம் வளர்ந்து வந்தான். இவள் அவனுக்கு சோராப் எனப் பெயரிட்டு வீட்டி லேயே வைத்து வளர்த்தாள். அவன் தந்தையைப் போல் போருக்குச் செல்லக் கூடாதென எண்ணி னாள். ஆனால் வீரன் மகன் வீரனாகவே தோன்று வான் என்பதை அவள் அறிந்தாளில்லை.

சோராப் பதினாறு வயதினன் ஆனான். அவன் தன் தந்தையைக் காணத் துடித்தான், அவன் அன் னையும் அவனை ஆசிகூறி அனுப்பி வைத்தாள். அச் சமயம் தார்த்தாரிய அரசனுக்கும் பாரசீக மன்னனுக் கும் போர் மூண்டது. ரஸ்டம் பாரசீகத்தில் இல்லை யென அறிந்த பகைவர் பாரசீகத்தின் மீது படை யெடுக்க நினைத்ததில் வியப்பொன்றும் இல்லையல் லவா? தந்தையைக் காணவேண்டு மென்றெண்ணிய சோராப் தார்த்தாரியப் படையில் சேர்ந்து கொண்டான்.

போரில் சோராப் இளஞ்சிங்கம்போல் நின்று பாரசீக நாட்டுப் படையைப் பலமுறை முறியடித்தான். பாரசீக மன்னன், தான் ரஸ்டத்தைப் புறக்கணித்த தற்கு வருந்தினான். அவன் காலில் விழுந்தேனும் தாய் நாட்டைக் காக்க அழைத்துவர விரும்பினான்.

அச்சமயம் சோராப் தன் தந்தையை நேரிற் காண ஒரு சூழ்ச்சி செய்தான். "இருபக்கப் படைகளும் போரிடுவதால் பலர் வீணில் மடிகின்றனர். அதை

விட்டு இரு பக்கத்திலும் சிறந்த வீரர்கள் இருவர் போரிட்டு வெற்றி தோல்வியை நிலை நிறுத்தலாம்" என்று கூறினான். இதை தார்த்தாரியப் படைத் தலைவன் ஒப்புக்கொண்டு பாரசீக மன்னனுக்கு அவ்வாறே அழைப்பு விடுத்தான்.

பாரசீக மன்னன் அவ்வழைப்பைக் கண்டதும் ரஸ்டத்தை அழைத்துவரத் தன் அமைச்சரை அனுப்பினான். அதன்படி அமைச்சர் சென்று மன்றாடி ரஸ்டத்தை அழைத்து வந்தனர். ஆனால் ரஸ்டம் ஒரு சிறுவனுக்கு இணையாகப் போர் புரிய விரும்பவில்லை. ஆகவே மாற்றுருவம் கொண்டு தன் பெயரை மறைத்து யாரோ ஒரு வீரன் என்று சொல்லிப் போர் புரிய இணங்கிச் சென்றான்.

ஒப்பற்ற வீரனாகிய தன் தந்தையைக் காணலாம் என்று எண்ணம் கொண்ட சோராப், யாரோ புதிய வீரன் வருவது கண்டு வியப்படைந்தான். ஒரு வேளை 'இவன் தான் ரஸ்டமோ' என்றும் அஞ்சினான். போர் தொடங்கும் முன் சோராப் அவனை நோக்கி 'நீ ரஸ்டம் தானா?' என்று கேட்டான். அதற்கு ரஸ்டம் 'சிறுவனே!' நான் யாராயிருந்தால் என்ன? உனக்கு அச்சமாயிருந்தால் உண்மையைச் சொல்லி விடு. வீணில் உயிரை இழக்க வேண்டாம்' என்றான். உடனே சோராப் சீறியெழுந்து போரிடத் தொடங்கினான்.

சோராப் இளைஞன் ஆதலால் நாற்புறமும் மிக விரைவில் சுற்றிச் சுழன்று தாக்கலானான். ரஸ்டத்தின் கைவன்மையும் மெய் வன்மையும் குறையவில்லை யாயினும் ஆண்டில் முதிர்ந்தவனாதலால் இளமைக்குரிய சுறுசுறுப்பு அவனிடம் குறைவது இயல்பே. ஆதலால் சோராபை அப்படித் துள்ள விடாமல் அடக்கிவிட எண்ணினான் ரஸ்டம். அவன் தன் வேலால் எறிந்து சோராபைக் கொல்ல முயன்றான், ஒரு முறை சோராப் அதற்குத் தப்பி விடவே மீண்டும் ரஸ்டம் கடுஞ் சீற்றத்துடன் வேலை வீசினான். அம்

முறையும் சோராப் தப்பினன். அதன் பின் ரஸ்டம் தன் நீண்ட கதையைச் சுழற்றி 'ரஸ்டம், ரஸ்டம்' என்று தனக்குப் பழக்கமான முறையில் முழங்கிக் கொண்டு சோராப்பின்மேல் பாய்ந்தான். ஏற் கெனவே ஐயம் கொண்ட சோராப் அப்பெயரைக் கேட்டதும். ஆ என்றலறிக்கொண்டு தன் வாளையும் வேலையும் நழுவவிட்டு நின்ருன். சீற்றத்துடன் பாய்ந்த ரஸ்டம் தன்னையும் மறந்து அவன் வெறுங் கையனுய் நிற்பதையும் கருதாமல் கதையால் அடித்து வீழ்த்தினுன். சோராப் 'ஆ என் தாயே! நான் காணுத தந்தை ரஸ்டமே, என்றலறிக் கொண்டே தரையில் வீழ்ந்தான்,

அம்மொழிகளைக் கேட்ட ரஸ்டம் திடுக்கிட்டான். 'சிறுவனே, நீ யார்? உன் பெற்ருேர் யாவர்?' என்று கேட்டான். சோராப், 'என் தாய் தமினு என்ற இள வரசி. தந்தையோ ஒப்பற்ற வீரராகிய ரஸ்டம். என்னைப் போர்முறை தவறிக் கொன்று என் தந்தை யின் தீராக் கோபத்தைத் தேடிக் கொண்டாய்' என்று கூறினுன். ரஸ்டம் மீண்டும் அவனை நோக்கி 'வீர இளைஞனே! தமினு பெண் மகவைப் பெற்ருள் என்று தானே கேள்வியுற்றேன். ஆண் மகவைப் பெற்ற தாகச் சொல்லவில்லையே' என்று இகழ்ச்சி தோன்றக் கூறிச் சிரித்தான்.

சோராப் "வீரரே. சிரிக்க வேண்டாம். நான் இதுவரை பொய் சொல்லி அறியேன். வாழ்வைத் துறந்து சாகப் போகும் இந்நிலையில் பொய் சொல் வேன் என்று நீ கருதுகிருயா? என் தாய் என்னைப் போரிலிருந்து தடுக்கவே அவ்வாறு என் தந்தைக்குச் சொல்லியனுப்பியதாகக் கூறியதைக் கேட்டிருக்கிறேன். மேலும் இதோ என் தந்தையின் முத்திரை பதித்த தாயத்தைப் பார்" என்று கூறிக் கையில் அணிந் திருந்த தாயத்தைக் காட்டினுன்.

சோராப் பின் சொற்களைக் கேட்டதும் ரஸ்டத்தின் மனத்தில் மின்னெளி போல் உண்மை பளிச்சென்று

பட்டது. தாயத்தைக் கண்டதுமே இடியால் தாக்குண்டவன் போல் தன்னை மறந்து அலறினுன்; தரையில் விழுந்தான்; தன் தலையில் அடித்துக் கொண்டான். "ஐயோ, மாவீரனுகிய ஆண் மகனைப் பெற்றும் அறியாமல் என் கையாலேயே அவனைக் கொன்று விட்டேனே" என்று புலம்பித் தன் வாளால் தன்னையே வெட்டிக்கொள்ளப் போனுன். குற்றுயிராய்க் கிடந்த மகன் 'தந்தையே பொறுக்க வேண்டும். ஒரு முறை அவசரத்தால் விளைந்த தீமை போதும். தாங்கள் வாழவேண்டும்' என்று கூறித் தடுத்தான். ரஸ்டம் அவனை மடிமேல் வைத்துக் கொண்டு 'மகனே! எனக்கு வாழ்வில் பற்றே இல்லையென்றுலும், உனது இறுதி விருப்பத்தை நிறைவேற்றுவேன்' எனக் கூறிக் கண்ணீர் வடித்தான். சோராப் அமைதியாகத் தந்தையின் மடியில் உயிர் விட்டு வீரவுலகம் புக்கான்,

## வினுக்கள்

1, ரஸ்டம் எவ்வாறு புகழ் பெற்ருன் ?
2. அவன் யாரை மணந்து கொண்டான் ?
3, அவனுக்குப் பெண் குழந்தை பிறந்தது என்று செய்தி அனுப்பியது ஏன் ?
4. ரஸ்டம் காட்டில் துறவிபோல் காலங்கழித்ததேன் ?
5, பாரசீக மன்னன் ரஸ்டத்தை அழைத்துவர விரும்பியதேன் ?
6. சோராப் தன் தந்தையைக் காண விரும்பிச் செய்ததென்ன ?
7. சோராபும் ரஸ்டமும் எவ்வாறு போர் செய்தனர் ?
8. ரஸ்டம் தன் மகனை எவ்வாறு அறிந்து கொண்டான் ?
9. பொய்யின் விளைவு என்ன ஆயிற்று ?

## 10. அறச்செல்வி

சோழ நாட்டின் தலை நகராய் விளங்கிய காவிரிப் பூம்பட்டினத்தில் வணிகர் தலைவனாய்ச் சிறந்து விளங்கிய மாசாத்துவான் மகன் கோவலனுக்கும் மாதவி என்பவளுக்கும் பிறந்தவள் மணிமேகலை. கோவலன் இறந்ததும் மாதவி மனம் வருந்தித் துறவு பூண்டாள்; தன் மகள் மணிமேகலையையும் தவநெறியிற் புகுத்தினாள்.

ஒரு சமயம் மணிமேகலையும் அவள் தோழியாகிய சுதமதியும் மலர் கொய்துவர ஒரு மலர் வனம் சென்றார்கள். அப்பொழுது மணிமேகலையை மணக்க விரும்பிய உதயகுமரன் என்ற அரச குமரனும் அங்குச் சென்றான். மணிமேகலை அவன் வருவதை யுணர்ந்து அங்கிருந்த பளிக்கறையில் ஒளிந்து கொண்டாள். சுதமதி உதயகுமரனுக்குப் பல அறிவுரைகளைக் கூற, உதயகுமரன் அவற்றைக் கருத்திற் கொள்ளாமல், "எவ்விதத்தும் அவளைப் பெறுவேன்! எனக் கூறிச் சென்றான். அவன் சென்றபின் பளிக்கறையினின்று வெளிவந்த மணிமேகலை, சுதமதியுடன் அவனைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில் ஆண்டு வந்த மணிமேகலா தெய்வம் அவளை மயக்கி வான் வழியே எடுத்துச் சென்று மணிபல்லவம் என்ற தீவில் விட்டுச் சென்றது.

அத்தீவிலுள்ள புத்த பீடிகையால் மணிமேகலை தன் பழம் பிறப்புச் செய்திகளை அறிந்து வியப்புற்றாள். அப்பொழுது மணிமேகலா தெய்வம் மீண்டும் தோன்றி, "பெண்ணே, உன்னை நன்னெறியிற் செலுத்திக் காக்கவே யான் இங்கெடுத்து வந்தேன்" எனக்கூறி அவளுக்கு வான் வழிப் பறக்கவும், நினைத்த உருக் கொள்ளவும், பசியின்றி இருக்கவும் வல்ல மூன்று மந்திரங்களைக் கற்பித்துச் சென்றது. பிறகு மணிமேகலையை "அத்தீவின் காவல் கடவுளாகிய தீவ திலகை எதிர்ப்பட்டு, எடுக்க எடுக்கக்

குறையாமல் உணவு சுரக்கும் அமுத சுரபியைப் பற்றிக் கூறினாள். மணிமேகலை அவள் கூறிய அமுத சுரபியைப்பெறும் பொருட்டுப் பீடிகையின் எதிரே யிருந்த கோமுகி என்னும் குளத்தை வலம் வந்து நின்றாள். அப்பொழுது அமுத சுரபி அக்குளத்தி னின்று வெளிப்பட்டு அவள் கையில் வந்து சேர்ந்தது.

பின்னர் மணிமேகலை பீடிகையையும் தீவ திலகையையும் வணங்கி, வான்வழியே சென்று காவிரிப் பூம் பட்டினத்தைச் சேர்ந்தாள். அவளைக் கண்டதும் மாதவியும். சுதமதியும் மகிழ்ந்தனர். மணிமேகலை தான் மணிபல்லவம் சென்று அடைந்த சிறப்புகளைக் கூறினாள்; பிறகு அமுத சுரபியைக் கையில் ஏந்தி. மக்கள் பசிப்பிணி தீர்க்க வீதி வழியே வந்தாள்.



அப்பொழுது அங்குப் பல ஆண்டுகளாய் யானைத்தீ என்னும் கொடும்பசி நோயால் அலைந்து கொண்டிருந்த காயசண்டிகை என்னும் வித்தியாதர மங்கை, "அமுத சுரபியில் எடுக்க எடுக்கக் குறையாமல் உணவு வளர வேண்டுமாயின், முதலில் அப் பாத்திரத்தில் கற்பிற் சிறந்த மங்கையொருத்தி பிச்சையிடவேண்டும். அத்தகைய கற்புடைய ஆதிரை என்பாள் வீடு இதோ இருக்கிறது" என்று மணிமேகலைக்குக் காட்டினாள். மணிமேகலை அவள் கூறிய படியே ஆதிரையிடம் சென்று பிச்சை வாங்கினாள். அமுத சுரபி நிரம்பிற்று.

காயசண்டிகை மணிமேகலையிடம் பிச்சை வாங்கி யுண்டு தீராப்பசி தீர்ந்து, தன் நாட்டை நோக்கி விரைந்து சென்றாள். பிறகு மணிமேகலை அவ்வூரி லுள்ள 'உலக அறவி' என்னும் அம்பலமே ஏழைகள் உறைவிடம் என்றறிந்து அங்குச் சென்றாள். எல் லார்க்கும் உணவளித்துப் பசியைப் போக்கினாள் உலக அறவியிற் பெருங் கூட்டம் கூடலாயிற்று.

உதயகுமரன் இதனைக் கேள்வியுற்று உலக அறவியை நோக்கி வந்தான். அவனைக் கண்ட மணிமேகலை, அவனுக்குச் சில அறவுரைகளைக் கூறினாள். பிறகு அம்பலத்தின் உட்புறம் சென்று, காயசண்டிகையின் உருவம் கொண்டு வெளிவந்தாள். உதயகுமரன் மணிமேகலையைக் காணுமல், பிறகு பார்ப்போம்!' எனக்கருதிச் சென்றான்.

இச்சமயம் காயசண்டிகையின் கணவனாகிய காஞ்சனன் என்பான், அவளைத் தேடிக்கொண்டு அங்கு வந்தான். மாற்றுருவம் கொண்ட மணிமேகலையைத் தன் மனைவியெனக் கருதி அருகிற் சென்று உரையாடத் தொடங்கினான். மணிமேகலை அவனை மதியாது மீண்டும் தன்னை நோக்கி வரும் உதய குமரனுக்கு அறிவுரை பகர்ந்து சென்றாள். இதைக்கண்ட காஞ்சனன் உண்மை உணராமல் மணிமேகலை தங்கியிருக்கும் உலக அறவியினுட் சென்று மறைந்திருந்தான். நள்ளிரவில் உதய குமரன் அங்கு வரக் காஞ்சனன் கடுஞ் சீற்றத்துடன் அவனை வாளால் வெட்டிக் கொன்று விட்டு, மணிமேகலையை நெருங்கினான். உடனே அங்கு ஒரு தூணில் இருந்த பாவை. "காஞ்சன! அவளை அணுகாதே! அவள் அறச் செல்வியாகிய மணிமேகலை. உன் மனைவி தீராப் பசி தீர்ந்து திரும்பிச் செல்லுகையில் விந்தமலைக்கு நேர் மேலாகப் பறந்து சென்றதால், விந்தா கடிகையின் வயிற்றில் அடக்கமாய் விட்டாள்" என்று கூறியது. அது கேட்ட காஞ்சனன் மிகவும் வருந்திச் சென்றான்.

உதய குமரன் கொலைப்பட்டதைக் கேள்வியுற்ற மன்னன், "கெடுமதியால் இறந்தவனை அடக்கம் செய்க!" எனக் கூறினான். பிறகு தன் மகன் இறந்ததற்குக் காரணமாயிருந்தவள் எனக் கருதி மணிமேகலையைச் சிறை செய்ய ஆணையிட்டான். மன்னவன் மனைவி அவளுக்குப் பல இன்னல்களை இயற்றினாள். மணிமேகலை அவற்றால் ஒரு சிறிதும் துன்புறா

மல் இருந்தாள். அதைக் கண்ட அரசன் மனைவி அவளது பெருமைகளை யுணர்ந்து, "மகனை இழந்த துயரத்தால் உனக்குக் கொடுமை செய்த என்னை மன்னிப்பாய்" என வேண்டினள். மணிமேகலை பல அறிவுரைகளைக் கூறி அவளைத் தேற்றினள்.

அதன்பின் மணிமேகலை, அமுதசுரபியை முற்பிறவியில் வைத்திருந்த ஆபுத்திரன் புண்ணிய ராசனாய்ப் பிறந்து ஆண்டு வந்த சாவகநாடு சென்று அவனைக் கண்டு உண்மை உணர்த்தினள்; அவனை மணிபல்லவம் வருமாறு கூறிவிட்டு வான் வழியாக அத்தீவை அடைந்து, அவன் வருகையை எதிர்நோக்கி நின்றாள். புண்ணியராசன் கப்பல் ஏறி அங்குச் சேர்ந்தான்; புத்த பீடிகையால் தன் பழம் பிறப்புணர்ந்தான். அவன் முற்பிறப்பில் இருந்த தன் எலும்புக் கூட்டையும் அங்குப் பார்த்தான்.

அச்சமயம் தீவதிலகை அங்கு வந்து "இந்திர விழா நடைபெறாத காரணத்தால் காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல் கொண்டது. அறவண அடிகள் என்ற முனிவருடன் மாதவியும், சுதமதியும் வஞ்சிமா நகரை யடைந்தனர்" என்று கூறிச் சென்றாள். மணிமேகலை புண்ணிய ராசனை மீண்டும் அவன் நாட்டிற்கு அனுப்பி விட்டு வான்வழியே வஞ்சிமாநகர் சென்று கண்ணகியாகிய பத்தினிக் கடவுளை வணங்கி, அவள் அருள் பெற்றாள். பிறகு அறவண அடிகளும், மாதவியும், சுதமதியும் காஞ்சி நகரம் சென்றமை அறிந்து மணிமேகலை அக்கணமே காஞ்சிமாநகர் புகுந்து, ஆங்குள்ளாருடைய பசிப்பிணி போக்கும் பணியைப் புரிந்தாள். அவள் வருகையை அறிந்த அறவண அடிகளும், மாதவியும், சுதமதியும் அவள் தங்கியிருந்த இடம் சேர்ந்து அவளைக் கண்டனர். மணிமேகலை அறவண அடிகளைப் பணிந்து, புத்த தருமத்தைக் கேட்டுணர்ந்து, அந்நகரிலேயே அறஞ் செய்தலை மேற்கொண்டு வாழ்ந்து, முடிவில் வீடுபெற்றாள். இம் மணிமேகலையின் வரலாற்றைக் கூறும் காப்பியம்

ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றாகும். இதனை இயற்றியவர் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்பவராவர்.

## வினாக்கள்

1. மணிமேகலையின் பெற்றோர் யாவர் ?
2. மணிமேகலையைத் தவநெறியில் புகுத்தியது என் ?
3. உதயகுமரன் என்பவன் யார் ?
4. மணிமேகலா தெய்வம் மணிமேகலையை எங்கே கொண்டு சென்றது ? என் ?
5. மணிமேகலைக்கு அமுதசுரபி எவ்வாறு கிடைத்தது ?
6. மணிமேகலை மணிபல்லவத்தில் அடைந்த நன்மைகள் யாவை ?
7. காயசண்டிகை என்பவள் யார் ?
8. உதயகுமரன் எவ்வாறு இறந்தான் ?
9. தூணிலிருந்த பாவை காஞ்சனனுக்குக் கூறியதென்ன ?
10. மணிமேகலையின் பெருமையை எவ்வாறு அரசன் மனைவி அறிந்து கொண்டாள் ?
11. புண்ணியராசன் என்பவன் யார்? அவன் அறிந்ததென்ன?
12. மணிமேகலை முடிவில் எங்கே சென்று எவ்வாறு வாழ்ந்தாள் ?
13. மணிமேகலையின் வரலாற்றைக் கூறும் நூல் எது ?

---

# 11. தீராக்கோபம் போராய் முடியும்

ரஷ்யா நாட்டைச் சேர்ந்த சிற்றூர் ஒன்றில் ஐவான் என்ருெரு குடியானவன் வாழ்ந்தான். அந்த வூரில் செல்வாக்குடைய பணக்காரன் அவன். நில புலங்களும் தோட்டமும் அவனுக்கு உண்டு. நல்ல உடல் வலிமையும் உழைப்பும் உடையவன் அவன். அவனுக்கு ஆண்மக்கள் மூவர் இருந்தனர். அவர் களில் மூத்தவனுச்குத் திருமணமாகிவிட்டது. இரண் டாவது மகன், மணம் செய்துகொள்ளும் வயதை அடைந்திருந்தான். அவன் குடும்பத்திலுள்ள அனை வரும் நல்ல உழைப்பாளிகள். வயதான ஐவான் தந்தை மட்டும் முதுமையாலும், நோயாலும், உழைக்க இயலாதவராய் இருந்தார். ஐவான் வீட்டில் உழவுக்கு வேண்டிய குதிரைகளும், ஆடுகளும், கோழிகளும் இருந்ததால், பெண்களுக்கும் வேலை நிரம்ப இருந் தது. பெண்கள் வயலில் வேலை செய்வதுடன் வீட்டு வேலைகளையும் கருத்துடன் செய்வர்.

ஐவான் வீட்டுச்கு அடுத்த வீட்டில் கேப்ரியல் என்பவன் வாழ்ந்து வந்தான். அவனும் போதுமான செல்வம் படைத்தவனே. கேப்ரியலின் தந்தை உயி ருடன் வாழ்ந்த காலத்தில் அடுத்து வாழ்ந்த அவ்விரு குடும்பத்தாரும் மிகுந்த நட்புடன் வாழ்ந்து வந்தனர். ஐவானும் கேப்ரியலும் பெரியவர்களாகிப் பொறுப் பேற்ற பிறகு முன்போல் அவ்வளவு ஒற்றுமையுடன் வாழ்ந்தார்கள் என்று கூறுவதற்கில்லை.

ஒருநாள் ஐவானின் மருமகளுக்குச் சொந்தமான கோழியொன்று கேப்ரியலின் வீட்டிற் பறந்து சென்று அங்கே முட்டையிட்டது. அதை எடுத்துவர ஐவான் மருமகள் அங்கே சென்ருள். அப்பொழுது அந்த வீட்டுக் கிழவி அவளை 'என்ன வேலையாக வந்தாய்?' என்று கேட்டாள். 'பாட்டி, என் கோழி இங்கே வந்து

முட்டையிட்டதாம். அதைப் பார்க்கவந்தேன்' என்ருள் ஐவான் மருமகள். அக்கிழவி "நாங்கள் உன் கோழியைப் பார்க்கவில்லை. எங்கள் வீட்டு முட்டைகளே மிஞ்சிக் கிடக்கின்றன. மற்றவர் வீட்டு முட்டைகள் எங்களுக்குத் தேவையில்லை" என்று சற்றுக் கடுத்த முகத்துடன் கூறினுள்.

கிழவியின் சொற்களைப் பொறுக்காத ஐவான் மருமகள் கிழவிக்கெதிராகக் கடுஞ் சொற்களை மொழிந்தாள். பேச்சு ஏச்சாக மாறியது. ஒருவரை யொருவர் திட்டினர். கிழவியுடன் கேப்ரியலின் மனைவி சேர்ந்து கொண்டாள். சச்சரவைக் கேட்டு ஐவான் மனைவியும் அங்கு வந்து தன் மருமகளுடன் சேர்ந்து கொண்டாள். சண்டை பெருகியது. ஒருவரை யொருவர் கடுமையாகத் திட்டிக் கொண்டனர்; வாய்க்கு வந்தபடி தூற்றிக் கொண்டனர்.

சிறிது நேரத்தில் வாய்ச்சண்டை கைச்சண்டையாக மாறியது. ஒருவரையொருவர் பிடித்து இழுத்து அடித்துக் கொண்டனர். அப்பொழுது வயலிலிருந்து திரும்பிய கேப்ரியல் சண்டையை விலக்காமல் தன் மனைவிக்கு உதவியாகச் சேர்ந்தான். பிறகு ஐவானும் அவன் மக்களும் இச்செய்தி கேட்டுச் சண்டைக்கு ஓடி வந்தனர். ஐவான் வலிமை மிக்கவனுதலால் எல்லோரையும் ஒருபுறம் தள்ளி விட்டுக் கேப்ரியலின் தாடியைப் பிடித்து இழுத்தான். தாடி ஐவான் கையுடன் வந்து விட்டது. அதன்பின் அவ்வூர் மக்கள் கூடி அவர்களை விலக்கி விட்டனர்.

இவ்வாறு இரு குடும்பத்தார்க்கும் சண்டை ஏற்பட்டது. கேப்ரியல் மாவட்ட நீதி மன்றத்தில் ஐவான் மேல் வழக்குத் தொடுத்தான். கேப்ரியலின் மனைவியோ 'இவ்வழக்கில் ஐவான் தண்டனை கொடுக்கப் பட்டுக் கொடிய குற்றவாளிகளை அனுப்பும் சைபீரியா

வுக்கு அனுப்பப்படுவான்' என்று ஊரெல்லாம் கூறி வந்தாள். இவ்வாறு பகைமை வளர்ந்தது.

ஐவான் தந்தை படுத்தபடியே 'இச்சச்சரவு வேண்டாம். பொறுமையை மேற்கொள்ளுங்கள்' என்று தொடக்கத்திலேயே கூறினர். கிழவர் சொல்லுக்கு யாரும் செவிசாய்க்கவில்லை. 'ஒரு கோழி முட்டைக்கா இவ்வளவு சண்டை! கடவுள் ஆணைகளை மறக்காதீர்கள். இப்பொழுதாவது சண்டையை நிறுத்தி அமைதியாக வாழுங்கள்' என்றார் கிழவர், அவர் சொற்களை எவரும் மதிக்கவில்லை. 'கேப்ரியலின் மகன்தான் என் சட்டையைக் கிழித்தான். நான் கேப்ரியலின் தாடியைப் பிடித்து இழுக்கவில்லை' என்று கூறி ஐவான் கேப்ரியலின் மேல் வழக்குத் தொடுத்தான்.

இவ்வாறு ஒவ்வொருநாளும் அவ்விரு வீட்டாரும் எதையாவது கூறிச் சச்சரவிட்டுக்கொண்டேயிருந்தனர். பெரியவர்களைப் பார்த்துச் சிறுவர்களும் சண்டையிடலாயினர். பெண்களோ கண்டவிடமெல்லாம் வம்பும் வழக்கும் வளர்த்துக் கொண்டேயிருந்தனர். அவர்கள் வாழ்க்கை தீய வழிகளில் சென்றது. அச்சிற்றூர்ப் பஞ்சாயத்திலும், சிறிய பெரிய நீதிமன்றங்களிலும், ஒருவர்மேல் ஒருவர் விடாது வழக்கிட்டுக்கொண்டேயிருந்தனர். சில வழக்குகளில் கேப்ரியல் தண்டனை பெறுவான். வேறு சில வழக்குகளில் ஐவான் தண்டனை அடைவான். தண்டனை பெருகப் பெருக அவர்கள் சண்டைகளும் பெருகிக் கொண்டே போயின. இவ்வாறு ஆறு ஆண்டுகள் கழிந்தன.

கிழவர் படுக்கையிலிருந்தபடியே 'இதெல்லாம் தகாது. இச்சச்சரவுகளால் நீங்கள் அடைந்த நன்மையென்ன? உங்களுக்கு எவ்வளவு துன்பம் நேர்ந்துள்ளது என்பதை எண்ணிப் பாருங்கள். உங்கள் ஆற்றலையெல்லாம் தீமைக்கே செலவிட்டீர்கள். உழைப்பெல்லாம் வீணாகவில்லையா?' என்று அடிக்

கடி கதறுவார். ஆனால் யாரும் அவர் கூறுவதைப் பொருட்படுத்துவதேயில்லை.

ஒரு நாள் ஐவான் மருமகள், கேப்ரியல் குதிரைகளைத் திருடி அகப்பட்டுக் கொண்டதாகப் பழி கூறினாள். இதைக்கேட்ட கேப்ரியல் அவளை நன்றாக அடித்துவிட்டான். ஒரு வாரம் அவள் படுக்கையில் கிடக்கும்படி ஆகிவிட்டது. ஐவான் கேப்ரியலின் மேல் வழக்கிட்டான். அவ்வழக்கு தள்ளப்பட்டது. ஐவான் விடாமல் மாவட்ட நீதி மன்றத்தில் வழக்கிட்டான்; அங்கே சூழ்ச்சி முறைகளைக் கையாண்டு பணத்தைச் செலவு செய்து கேப்ரியலுக்குச் சவுக்கடி கொடுக்கும் தண்டனையை வாங்கி வைத்தான்.

தண்டனையடைந்த கேப்ரியல் உள்ளத்தில் பகைமை கொழுந்துவிட்டெரிந்தது. 'உன்னை என்ன செய்கிறேன் பார்!' என்று கூறிக்கொண்டே சென்றான். கேப்ரியல் சவுக்கால் அடிக்கப்படும் பொழுதுதான் ஐவானின் உள்ளத்திலிருந்த பகைமையுணர்ச்சி குறைந்து கேப்ரியலுக்காக வருந்தும் நல்லியல்பு மெல்லத் தலை காட்டியது. அத்துடன் தந்தையின் அறவுரையும் அவனது நல்லியல்புகளைத் தூண்டியது. 'ஐவான், நீ அவன் செய்த பிழைகளை மட்டும் பார்க்கிறாய். நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் செய்த குற்றங்களைப் பார்க்கவேயில்லை. பகைமையுணர்ச்சி உன் கண்ணையும் அறிவையும் அறவுணர்ச்சிகளையும் மறைத்துவிட்டது. நன்றாக எண்ணிப்பார். கேப்ரியல் எவ்வளவு குற்றவாளியோ அதைவிடப் பன்மடங்கு குற்றவாளி நீ என்பதை உணர்வாய்'' என்று இடித்துக் கூறினார் கிழவர். ஐவான் வாய் பேசாது நின்றான்; அவர் சொல்வது உண்மையே என்றெண்ணினான். அச்சமயம் வீட்டினுள் நுழைந்த பெண்கள் கேப்ரியலின்மேல் ஒன்றுக்குப் பத்தாகப் பழி கூறிக்கொண்டே வந்தனர். அதைக் கேட்டதும் ஐவான் மீண்டும் பகைமையில் மூழ்கினான்.

அன்று நள்ளிரவாயிற்று. காற்றும் வீசத் தொடங்கியது. உறக்கம் கொள்ளாத அவன் அன்று நீதிமன்றத்தில் கேப்ரியல் கூறிய சொற்களை எண்ணிக் கொண்டே வீட்டின் பின்புறம் வந்தான். அங்கே வைக்கோல் போரின் அருகில் யாரோ மறைவதுபோல் தெரிந்தது. திடீரென்று வைக்கோல் போரில் வெளிச்சம் தோன்றியது. அவ் வெளிச்சத்தில் கேப்ரியல் நிற்பது தெரிந்தது. 'ஆ! வைக்கோல் போரில் தீ வைத்து விட்டான்' என்று கூவிக்கொண்டே அவனை ஓடிப் பிடித்தான். அவன் திமிறினன். ஐவானும் விடாது பற்றி இழுக்கவும் கேப்ரியல் ஒரு தடியால் அவன் மண்டையில் அடித்துவிட்டு ஓடி மறைந்தான். ஐவான் நினைவிழந்து கீழே கிடந்தான்.

ஐவான் மூர்ச்சை தெளிந்து தன்னைச் சுற்றிப் பார்க்கையில் வைக்கோல்போர் முழுவதும் எரிந்து வீட்டிலும் தீப்பற்றி விட்டதை அறிந்தான். இதற்குள் ஊர்க்கூட்டம் கூடி விட்டது. ஐவான் தட்டுத்தடுமாறி எழுந்து செல்வதற்குள் தீ பரவத் தொடங்கிவிட்டது. கேப்ரியல் வீட்டிலும் தீ பரவி அத்தெருவிலுள்ள பல வீடுகளையும் அழிக்கத் தொடங்கியது. ஐவான் முதலில் வைக்கோல் போரில் வெளிச்சம் தெரிந்த பொழுதே கேப்ரியலுடன் போராட நினையாமல் அதை அணைத்திருந்தால் இவ்வளவு அழிவு நேர்ந்திருக்காதே எனத் தனக்குள் எண்ணினன். வீட்டிலுள்ளார் ஆடு மாடுகளையும் கிழவரையும் காப்பாற்றுவதில் முனைந்தனர். காற்றும் கடுமையாக வீசியதால் தெருவே அழிந்து போயிற்று. ஐவான் வீட்டிலிருந்த பொருள்களெல்லாம் அழிந்தன. அவன் ஒன்றும் தோன்றமல் 'அப்பொழுதே அணைத்திருக்க வேண்டும். என்ன முட்டாள் தனம் செய்தேன்! என்று தனக்குள் முணு முணுத்துக்கொண்டிருந்தான்.

அப்பொழுது அவன் தந்தை அவனைப் பார்த்து "ஐவான் நான் சாகும் நிலையில் இருக்கிறேன். உண்மை

யாகச் சொல். இது யார் குற்றம்?" என்று கேட்டார். அப்பொழுதுதான் ஐவானுக்கு நல்லுணர்வு வந்தது. 'தந்தையே! இது என் குற்றம் தான். என்னை மன்னித்து விடுங்கள்' என்று அழுது கொண்டே கூறினான் ஐவான். அதன் மேல் கிழவர் இனிமேலாவது கடவுள் காட்டிய வழியில் நடந்தால் ஒரு குறைவும் இல்லை. மகனே! யாரிடமும் அவன் நெருப்பு வைத்தான் என்று குறை கூறுதே. நீ பிறர் குற்றத்தை மன்னித்தால் கடவுள் உன்னை மன்னிப்பார்" என்று கூறி முடித்ததும் கண்களை மூடிப் படுத்தார். அவ்வளவில் அவர் உயிர் உடலை விட்டுப் பிரிந்தது,

ஐவான் தந்தை சொற்படி நடந்தான். யாரிடமும் கேப்ரியலைப் பற்றி ஏதும் சொல்லவில்லை. கேப்ரியல் தனக்குப் பெருந் தண்டனை கிடைக்கும் என்று அஞ்சியவன் ஐவான் சும்மா இருப்பது கண்டு வியப்புற்றான். அவன் உள்ளத்திலும் நல்ல நினைவு எழுந்தது, பகைமை ஒழிந்தது. நாளடைவில் இரு குடும்பத்தினரும் அன்புடன் பழகத் தொடங்கினர்.

அச்சிற்றூர் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. ஐவானும் கேப்ரியலும் அடுத்தடுத்தே வீடுகளைக் கட்டிக் கொண்டு நெடுங்காலம் ஒற்றுமையாக வாழ்ந்தனர்.

வினாக்கள்

1. ஐவானும் அவன் குடும்பத்தாரும் எவ்வாறு வாழ்ந்து வந்தனர்?
2. ஐவான் மருமகளுக்கும் அடுத்த வீட்டுக் கிழவிக்கும் முதலில் எதனால் வாக்குவாதம் ஏற்பட்டது?
3. அச்சிறு சச்சரவு எவ்வாறு பெருஞ் சண்டையாயிற்று?

4. ஐவான் தந்தை முதலில் கூறிய அறிவுரை என்ன ?

5. ஐவானும் கேப்ரியலும் தொடுத்த வழக்குகளும் அவற்றின் விளைவுகளும் யாவை ?

6. கிழவர் கூறிய அறிவுரை யாது ?

7. ஐவான் மனம் மாறும் வகையில் கிழவர் இடித்துக் கூறிய தென்ன ?

8. ஐவான் வைக்கோற் போர் அருகில் கண்டதென்ன ?

9. ஐவான் தனக்குள் முணுமுணுத்ததென்ன ? அதன் காரண மென்ன ?

10. கிழவர் சாகும்பொழுது கூறிய அறிவுரை என்ன ?

11. அதன்பின் அவன் செய்ததென்ன ? அதனால் ஏற்பட்ட நன்மை என்ன ?

# 12. ஏமநாதன் தோல்வி

பண்டை நாளில் தமிழ்வளர்த்த மதுரையில் வரகுண பாண்டியன் என்பான் பெருஞ் சிறப்புடன் ஆட்சி புரிந்து வந்தான். அவன் நல்லாட்சி செய்து தமிழை யும் பல கலைகளையும் வளர்த்தான். அவன் அவைக் களத்தில் யாழ் வாசிப்பதில் வல்ல பாணபத்திரன் என்ற கலைஞன் ஒருவன் இருந்தான். அவ்விசைக் கலைஞன் மதுரையிற் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் இறைவனிடம் பேரன்பு பூண்டவன். தன் இசைக் கலையால் மன்னனையும் மக்களையும் மகிழ்வித்துப் புகழ் பெற வாழ்ந்தான்.

ஒரு நாள் வடநாட்டிலிருந்து ஏமநாதன் என்ற யாழ்ப் பாணன் ஒருவன் மதுரைக்கு வந்து சேர்ந்தான்- அவன் சென்ற இடமெல்லாம் இசையில் வல்லவர்க ளுடன் இசைப்போரிட்டு வெற்றி கொண்டு பரிசுகள் பல பெற்றவன். அவன் புகழ் நாடெங்கும் பரவியிருந் தது. அவன் பாண்டியன் அவைக்களம் அடைந்து யாழினைக் கூட்டி இன்னிசை பாடினன். பாண்டியன் அவன் இசை இன்பத்தில் மகிழ்ந்து அவனைப் பாராட் டிப் பல ஆடைகளையும் பொன் அணிகளையும் பரிசாகக் கொடுத்தான். மேலும் அவன் தங்குவதற்குப் பெரிய மாளிகை ஒன்றையும் கொடுத்தான்.

பாண்டியனின் பரிசுபெற்ற ஏமநாதன் செருக்குத் தலைக் கேறியது. முன்பே பல இடங்களில் பெற்ற வெற்றியுடன் பாண்டியன் கொடுத்த பரிசும் சேரவே தனக்கு ஒப்பும் உயர்வும் யாரும் இல்லை என்று எண்ணி இறுமாந்தான். அதனை ஒற்றரால் உணர்ந்த பாண்டியன் பாணபத்திரனை அழைத்து வருமாறு பணித்தான். ஏவலர் பாணபத்திரனை அழைத்து வந்தனர். அரசன் பாணபத்திரனைப் பார்த்து 'பத்திரனே! ஏமநாதனுடன் இசைப் போரிட்டு அவனை வென்று அவன் செருக்கை அடக்க வேண்டும். அது உன்னால் முடியுமா ?'

எனக்கேட்டான். பத்திரன் "அரசே! தங்கள் துணை வலியாலும் எல்லாம் வல்ல இறைவன் அருள் வலியாலும் அவனை வெல்வேன்" எனப் பணிவுடன் கூறினான். அரசன் "சரி. நாளை அவனுடன் பாடுக" என்று சொல்லி அனுப்பினான். பாணபத்திரன் தன் வீட்டிற்குச் சென்றான்.

நகரின் பல இடங்களிலும் ஏமநாதனிடம் இசை கற்கும் மாணவர் பலர் இன்னிசை பாடித்திரிந்தனர். பாணபத்திரனும் அவர் பாடுவதைக் கேட்டு வியந்தான். "மாணவர்களே இப்படிப் பாடினால் ஏமநாதன் எப்படிப் பாடுவானோ? நாளை அவனுடன் இசைப் போர் செய்து எவ்வாறு வெற்றி கொள்வேன்?" என்று கலங்கினான். தன் கலக்கம் தீர இறைவன் கோயிலையடைந்து வணங்கி "இறைவனே! உன் திருவருள் தான் எனக்கு வழிகாட்ட வேண்டும்" என்று வேண்டிக்கொண்டு வீடு சேர்ந்தான் பாணபத்திரன்.

அன்று மாலை வயது முதிர்ந்த ஒரு கிழவன் ஒரு விறகுக் கட்டைத் தலையில் சுமந்து தள்ளாடி நடந்து ஏமநாதன் இருந்த வீதி வழியே வந்தான். வரும் வழியெல்லாம் விறகை விலை கேட்பவர்க்கு வாங்க முடியாத விலை கூறிக்கொண்டே வந்து ஏமநாதன் தங்கியிருந்த மாளிகையை அடைந்தான். அங்கு ஒரு புறத்தே விறகுக் கட்டைச் சார்த்தித் திண்ணையில் அமர்ந்தான். பிறகு அக்கிழவன் அவ்விறகுக் கட்டில் செருகியிருந்த பழைய யாழ் ஒன்றைக் கையில் எடுத்து விளையாட்டாக இசை பாடத் தொடங்கினான்.

விறகு வெட்டி இசை பாடத் தொடங்கியதும் தெருவில் சென்ற மக்கள் அப்படியே நின்றனர். விலங்குகள் அசைவற்று நின்று கேட்டுத் தம்மை மறந்தன. பறவைகளும் இசையின்பத்தில் ஈடுபட்டுப் பறவாது நின்றன. இத்தகைய இன்னிசையை வீட்டின் உள்ளே இருந்த ஏமநாதனும் கேட்டு இப்படிப்

பாடுபவன் யார் என்றறிவதற்காக வெளியே வந்தான். அவன் இக்கிழவனைக் கண்டதும் வியப்புற்று 'நீ யாரப்பா?' என்று கேட்டான். 'ஐயா, நான் இவ்வூர்தான். விறகு சுமந்து பிழைப்பவன். ஒழிந்த நேரத்தில் இப்படிப் பாடுவேன்' என்றான் விறகு வெட்டி. 'இன்னும் ஒருமுறை பாடு' எனக் கேட்டுக் கொண்டான் ஏமநாதன்.

விறகு தலையன் மீண்டும் பாடியதும் இசையில் வல்லவனாகிய ஏமநாதனும் தன்னை மறந்தான். தான் இதுவரை கேட்டறியாத இசை வெள்ளத்தில் மூழ்கி மகிழ்ந்தான். அதன் பிறகு ஏமநாதன் அக்கிழவனைப் பார்த்து "முதியவனே! இவ்விசையை எங்கே கற்றாய்?" என்று கேட்டான். அவ்விறகு தலையன் சிரித்துக் கொண்டே, "ஐயா, இவ்வூர்ப் பாணபத்திரன் மாணவர்களில் நானும் ஒருவன். ஆனால் வயதின் முதிர்ச்சியால் எனக்கு இசை வராது என்று கூறி என்னை விலக்கிவிட்டான். அது முதல் இவ்வாறு விறகு சுமந்து பிழைத்து வருகிறேன்" என்று கூறினான்.

அதைக் கேட்ட ஏமநாதன் பெரு வியப்படைந்தான். "பாணபத்திரனால் இசைக்குத் தகுதியற்றவன் என்று விலக்கப்பட்ட இக்கிழவன் இப்படிப் பாடினால், அவனிடம் பயிலும் மாணவர் எவ்வாறு பாடுவர்? அவர்களுக்கெல்லாம் இசை கற்பிக்கும் பாணபத்திரன் திறமை எத்தகையதாயிருக்கும்? அவனுடன் இசைப் போட்டியில் எதிர்த்துப்பாட யாரால் முடியும்? அறியாமல் வந்து சிக்கிக்கொண்டேன்" என்று கருதி உள்ளே சென்றான். விறகு வெட்டியும் எழுந்து சென்று மறைந்தான்.

அன்று நள்ளிரவில் ஏமநாதன் தன் மாணவரை அழைத்துக்கொண்டு எவருக்கும் தெரியாமல் வடதிசை நோக்கி ஓடி மறைந்தான். சோமசுந்தரப்பெருமான் பாணபத்திரன் கனவில் தோன்றி "அன்பனே! உன் வேண்டுகோட்படியே நாம் இன்று விறகு

தலையனாக ஏமநாதனிடம் சென்று இசைபாடிப் பாண பத்திரன் அடிமை என்று கூறி அவனை வென்றோம்'' என்று கூறி மறைந்தார். மனத்தாலும் நினைக்க முடியாத மொழிகளைக் கனவிற் கேட்ட பாணபத்திரன் விழித்தெழுந்து வியப்புற்றான்.

மறுநாள் பொழுது புலர்ந்ததும் பாணபத்திரன் கோயிலையடைந்து இறைவனைப் பணிந்தெழுந்து "இறைவனே! என்ன குற்றம் செய்து விட்டேன். யாவரும் போற்றும் உன்னை விறகு சுமந்து வீதி வழியே நடக்க வைத்தேனே. என் பிழையை மன்னிக்க வேண்டும்'' எனக் கூறிப் பணிந்தான். பிறகு பாணபத்திரன் அரண்மனை அடைந்து பாண்டியனை வணங்கி நின்றான். பாண்டியன் உடனே ஏமநாதனை அழைத்து வருமாறு ஏவலரை அனுப்பினான். ஏவலர் சென்று பார்க்கையில், மாளிகை காலியாயிருந்தது. யாரையும் காணாமல் அத் தெருவிலுள்ளாரைக் கேட்டனர் ஏவலாளர். அவர்கள் ஏவலரைப் பார்த்து "ஏமநாதனும் அவன் மாணவரும் நேற்றுவரை இங்கிருந்தனர். நேற்று மாலை எவனோ ஒரு கிழவன் விறகைச் சுமந்து வந்து களைப்பாறியவன் இசை பாடினான். அக் கிழவன் தன்னைப் பாணபத்திரன் அடிமை என்று கூறிக்கொண்டான். பிறகு என்ன நடந்ததோ தெரியாது. இன்று காலையில் இங்கு யாரையும் காணவில்லை. இரவோடு இரவாக ஏமநாதன் ஓடி விட்டான் போலும்'' என்று கூறினர். ஏவலர் இச் செய்தியைப் பாண்டியனிடம் சென்று தெரிவித்தனர்.

பாண்டியன் பெரு வியப்படைந்து பாணபத்திரனைப் பார்த்து, 'ஏமநாதன் ஏன் ஓடிவிட்டான்?'' என்று கேட்டான். பாணபத்திரன் சோமசுந்தரப் பெருமான் தன் கனவில் தோன்றிக் கூறிய செய்தியைச் சொன்னான். பாண்டியன் இது இறைவன் திருவிளையாடலே எனத் தெளிந்து இறைவன் திருவருட் சிறப்பையும் பாணபத்திரன் அன்பின் பெருமையை

யும் நன்கு உணர்ந்தான், அதன்பின் பாணபத்திரனை யானைமேல் ஏற்றி நகர்வலம் வரச் செய்து பட்டமும் பரிசுகளும் வழங்கிப் பாராட்டினான் பாண்டியன். பாணபத்திரன் அன்று முதல் இறைவனைப் பாடுவதையே பணியாகக் கொண்டு பாடி வாழ்ந்து வரலானான்.

## வினாக்கள்

1. பாணபத்திரன் எவ்வாறு வாழ்ந்து வந்தான் ?
2. ஏமநாதன் இசை வன்மை எவ்வாறு விளங்கியது ?
3. ஏமநாதன் செருக்குக் கொண்டதேன் ?
4. ஏமநாதன் செருக்கையடக்கப் பாண்டியன் செய்தது என்ன?
5. பாணபத்திரன் கலங்கியது ஏன் ?
6. இறைவன் விறகு தலையனாக எவ்வாறு வீதிவழியே வந்தான் ?
7. இறைவன் பாடிய இசைத் திறம் எவ்வாறிருந்தது ?
8. ஏமநாதனிடம் விறகு தலையன் தன்னைப்பற்றி என்ன கூறிக் கொண்டான் ?
9. ஏமநாதன் தன் மாணவருடன் ஓடியது ஏன் ?
10. இறைவன் பாணபத்திரன் கனவில் கூறியதென்ன ?
11. ஊர்மக்கள் பாண்டியன் ஏவலரிடம் கூறிய செய்தி என்ன?
12. பாண்டியன் பாணபத்திரனுக்குச் செய்த சிறப்புக்கள் யாவை ?

---

# 13. கொடையிற் குமணன்

பண்டை நாளில் தமிழ் மக்கள் ஈகையை மிகவும் போற்றி வந்தனர். செல்வத்தின் பயன் ஈகையே எனக் கருதினர். அவ்வாறு கொடையிற் சிறந்த வள்ளல்கள் பலர் புகழ்பெற வாழ்ந்திருக்கின்றனர். அவ்வள்ளல்கள் எல்லோரிலும் மேலாகத் தமிழுக்குத் தன் தலையையே கொடுக்க முன்வந்தான் ஒரு வள்ளல்; அவனே குமணன் என்னும் பெயர் கொண்டவன்.

குமணன் முதிரம் என்னும் மலைக்குத் தலைவன். அம்மலையும் அதனைச் சார்ந்துள்ள சில ஊர்களும் அவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தன. அவன் புலவர்க்கும் பாணர்க்கும் வாரி வாரிப் பரிசில் வழங்குவான்; தன்னிடம் வந்த இரவலர்க்கு இல்லை என்பது அவன் வாழ்வில் இல்லை. நாடெங்கும் கொடையிற் சிறந்த குமணன் என்ற பெயர் பரவியது.

குமணனுக்கு இளங்குமணன் என்றொரு தம்பி உண்டு. அவன் எல்லா வகையிலும் அண்ணனுக்கு நேர்மாறானவன். அவன் தீயோர் நட்பையே பெரிதும் விரும்பினான். அவன் கல்வியின் பெருமையை அறியான். தன் அண்ணன் புலவர்க்கும் வறியவர்க்கும் ஈவதைக் கண்டு சினம்கொண்டான். இப்படியே வருவோர் எல்லார்க்கும் கொடுத்து வந்தால் நம் செல்வம் குறைந்து வறுமையால் வாட நேரிடுமே எனக் கருதினான். அவனது தீய நண்பர்களும் அவனது அறிவற்ற தீய நினைப்புக்களை மேலும் வளர்த்தனர். அத் தீயோர் தம் நலம் ஒன்றே கருதி இளங் குமணனைத் தம் கைப்பாவை போல் ஆட்டிவைத்தனர். படிப்பும் பண்பும் இல்லாத இளங்குமணன் அவர் கூறுவதைப் பெரிதெனக் கருதி அவர் விருப்பப்படியே நடந்துவந்தான்.

தீயோர் தூண்டுதலால் இளங்குமணன் ஆட்சியைக் கைப்பற்றிக்கொள்ளக் கருதினன். குமணன் தம்பியின் தீய நினைப்பை உணர்ந்தான். தம்பி தீயோர் சேர்க்கையால் கெடுவதை அறிந்தான். அவனைத் திருத்த முயன்றும் பயன்படாது போயிற்று. தன் தம்பியின் நண்பர்களான தீயோர்களை ஒழித்து அவனை ஒரு நொடியில் அடக்கிவிடக் குமணனால் முடியும். நாட்டு மக்களில் நல்லோர் யாவரும் குமணனையே விரும்பினர். இளங் குமணனை அறவே வெறுத்தனர். இந்நிலையில் அவனை அடக்குவது மிகவும் எளிதே. ஆனால் தம்பி மேல் வைத்த அன்பு குமணனை அவ்வாறு செய்ய விடாது தடுத்தது. ஆகவே 'நாடாளும் ஆசையாலன்றோ தம்பி தன்மேல் அன்பற்றவனாக மாறினன். இவனே இந்நாட்டை ஆளட்டும்' எனக் கருதி ஆட்சியை அவனிடம் ஒப்புவித்துவிட்டுக் காட்டிற்குச் சென்று துறவியைப் போல் வாழ்ந்தான் குமணன்.

ஆட்சிப் பொறுப்பு தன் கையிற் கிடைத்ததும் இளங்குமணன் பெரு மகிழ்ச்சியடைந்தான்; தீய தோழர்கள் சொற்படி ஆடினன். ஆட்சி குரங்கின் கையிற் சிக்கிய பூமாலை போல் ஆயிற்று. மக்கள் அவன் ஆட்சியில் பலவிதத்தும் துன்புற்றனர். அவர்கள் குமணனை எண்ணி எண்ணிக் கண்ணீர் வடித்தனர்; இளங்குமணனை அறவே வெறுத்தனர். குடிமக்கள் தன்னைத் தூற்றுவதையும் குமணனைப் போற்றுவதையும் இளங்குமணன் அறிந்து கடுஞ்சினம் கொண்டான்.

இளங்குமணனுக்கு நண்பர்களாக வாய்த்த கயவர், "குமணன் உயிருடன் இருக்கும் வரை உன் ஆட்சி அமைதியாக நடவாது. உன்னை அகற்றி விடக் குமணனை அரசனாக்கவே மக்கள் முயல்வர். அதலால் குமணனை ஒழித்து விடுவதே உனக்கு ஏற்ற வழியாகும்" என்று கூறினர். இளங்குமணனும் அதை மெய்யென்று நம்பினன். நஞ்சினுங் கொடிய அத்

தீயோர் சொல்லை நம்பிய இளங்குமணன், 'குமணன் தலையைக் கொண்டு வருவோருக்கு ஆயிரம் பொன் பரிசளிக்கப்படும்' என்று நகர் எங்கும் பறையறை வித்தான். இச் செய்தியைக் கேள்வியுற்ற குமணன் தன் தம்பியின் கொடுமையை எண்ணி வருந்தினன்.

அந்நாளில் ஆவூரில் பெருந்தலைச் சாத்தனுர் என்னும் பெரும் புலவர் வாழ்ந்து வந்தார். புலமையில் சிறந்த அவர் குடும்பம் வறுமையால் வாடியது. குழந்தைகள் உணவின்றிப் பசியால் பதைத்தனர். அவர் மனைவியோ குழந்தைகளின் துயர் போக்கும் வகையறியாது நீர் நிறைந்த கண்களுடன் புலவரைப் பார்த்தாள். புலவர் வேறு வழியின்றி வள்ளல்களைத் தேடிப் புறப்பட்டார்.

முதிர மலைநாட்டில் அவர் கருதிவந்த குமணனைக் காணவில்லை. இளங்குமணன் ஆட்சிபுரிவதைப் புலவர் கண்டார். "அவனே கல்வி நலம் பெருதவன்; கயவர் நட்பை விரும்புபவன்" என்ற அவன் இயல்புகளைக் குடிமக்கள் கூற அறிந்தார்; வறுமையைப் போக்க வள்ளலைத் தேடி நீண்டதூரம் நடந்து வந்தும், பயன் பெற இயலாத தம் விதியை நொந்து கொண்டார்; காட்டுக்குச் சென்ருவது குமணனைக் காண்பதே நன்று எனக் கருதி வள்ளலைத் தேடிச் சென்ருர்.

புலவர் காட்டில் குமணனைத் தேடிக் கண்டுபிடித்தார். குமணன் புலவரை வரவேற்று இன்மொழி கூறி அவர் தம்மை நாடி வந்த காரணம் யாதெனக் கேட்டான். பெருந்தலைச் சாத்தனுர் தம் வறுமை நிலைகூறி, அதைப் போக்கிக்கொள்ளவே அவனிடம் வந்ததாகக் கூறினர்.

புலவரின் வறுமை நிலையை உணர்ந்து குமணன் மனம் நெகிழ்ந்தான். அப்பொழுது தான் உள்ள நிலையில் அவர் துயரம் துடைக்க வழியில்லையே என வருந்தினன். 'நான் ஆட்சிபுரியும் அந்த நாளில் வராமல் ஆட்சியைத் துறந்து காட்டில் தம்பியின் கொடுமைக்

காக மறைந்து வாழும் இந்த நாளில் வந்தீரே' எனக் கூறி நொந்தான். அவ்வாறு கூறியதும் அவன் மனத்தில் பளிச்சென்று ஓர் எண்ணம் தோன்றியது. தன் தலையைக் கொணர்வார்க்கு ஆயிரம் பொன் பரிசு தருவதாகத் தம்பி பறையறைந்துள்ள செய்தி நினைவுக்கு வந்தது. தலையைக் கொடுத்தேனும் தமிழ்ப் புலவரின் வறுமை நிலையைக் களைய நினைத்தான். ஒன்றுக்கும் உதவாத தலை ஆயிரம் பொன் விலை பெறுவதையும் அவ்விலைப் பொருள் செந்தமிழ்ப் புலவர்க்கு உதவும் சிறப்பையும் எண்ணி மகிழ்ந்தான். உடனே புலவரிடம் தன் வாளை ஈந்து 'என் தலையைத் துணித்துச் சென்று ஆயிரம் பொன் பரிசு பெற்று வறுமை நீங்கி வாழ்க' எனக் கூறி வணங்கினான் குமணன்.

குமணன் தன் தலையைக் கொடுக்கத் துணிந்த கொடை வீரத்தை எண்ணி வியந்தார் புலவர். அவர் உள்ளம் குமணன் நீட்டிய வாளைக் கண்டு நடுங்கியது. தான் வாளை வாங்கப் பின் வாங்கினால் தன் கையாலேயே குமணன் அக் கொடுஞ்செயலைச் செய்துவிடுவானோ என்று அஞ்சி வாளைப் பெற்றுக் கொண்டார் புலவர். அவர் குமணனின் ஈகைத் திறத்தை எண்ணிக் கண்ணீர் விட்டபடியே, 'வள்ளலே, உமக்கு முன் வாழ்ந்து புகழ்கொண்ட வள்ளல்களின் புகழ் யாவும் உம் புகழின் முன் மங்கிவிட்டன. தாங்கள் கொடுத்த பரிசிலை இப்பொழுது நான் ஏற்றுக் கொண்டேன். இனி உமது தலை எமக்குரியதாகும். வேண்டும்போது அதைப் பெற்றுக்கொள்வேன். அதுவரை அதற்கொரு தீங்கும் நேராது பாதுகாப்பது உம் பொறுப்பாகும்' என்று கூறிக் குமணனைப் பலவாறு வாழ்த்தி அவன் கொடுத்த வாளுடன் அவ்விடம் விட்டுச் சென்றார்.

அவ்வாறு காட்டில் குமணனை விட்டுச் சென்ற பெருந்தலை சாத்தனார் மீண்டும் இளங்குமணன் வாழும் ஊரையடைந்து அரண்மனைக்குச் சென்று

அவனைக் கண்டார். வாளுடன் வந்த புலவரைக் கண்ட இளங்குமணன் திடுக்கிட்டான். அவ்வாளும் தன் அண்ணன் கையிலிருந்த வாள் என்பதைக் கண்டு கொண்டானகையால் அவன் மனம் பதைபதைத்தது. பரிசை விரும்பித் தன் அண்ணனைக் கொன்றுவிட்டுத் தான் புலவர் வந்திருக்கிருர் என்று எண்ணி 'ஐயோ! என்ன செய்தீர்?', என்று அலறினன். தானுடா விடினும் தன் சதையாடுமல்லவா? தீயோர் சேர்க்கையால் உலகம் உள்ளளவும் நீங்காத பழியைத் தேடிக் கொண்டதற்காக வருந்தினன்.

இளங்குமணன் உண்மையாகவே வருந்துவதை யுணர்ந்த புலவர் மேலும் நன்கறிய விரும்பி "அரசே! பெருஞ் செல்வம் படைத்த பலர், தம்மிடம் வந்த புலவர்க்கும் வறியவர்க்கும் ஒன்றும் வழங்காமலே இவ் வுலகில் வாழ்ந்து, புகழைத் தேடிக் கொள்ளும் வழி யறியாமல் மாய்ந்து மறைந்து விடுகின்றனர். ஆனல் குமணனே தம்மை நாடி வந்தவர்க்கு யானைகளையே பரிசாகக் கொடுத்துப் புகழ் கொண்ட வள்ளல். காட்டில் அவனைக் கண்டு என் வறுமை நீங்க வழி செய்ய வேண்டும் என்று வேண்டிப் பாடினேன். அவன் தலையையே பரிசாகக் கொடுத்தான். அவன் ஈகையை வாழ்த்தி அவன் தலைக்கு நீ குறித்த பரிசைப் பெற்றுப் போக வந்தேன்' என்று கூறினர்.

இளங்குமணன் கண்ணீரும் கம்பலையுமாக அவரை நோக்கி "ஐயா! நான் தான் அறிவின்மையாலும் கயவர் கூட்டுறவாலும் கெட்டழிந்தேன்; என் அண்ணன் தலைக்கே விலை வைத்தேன். செந்தமிழ்ப் புலவராகிய தங்களுக்கு, என் அண்ணன் தலையைக் கொய்ய எப்படித்தான் மனம் துணிந்ததோ! ஐயோ! இனி என் அண்ணனை எங்குக் காண்பேன்? புலவரே! அந்த வாளால் ஏன் தலையையும் கொய்து இந்த நாட்டையே பரிசாக ஏற்றுக்கொள்ளும்' எனக் கூறித் தலை வணங்கி நின்றுன்.

அவனுடைய மனமாற்றத்தை அறிந்த புலவர். 'அரசே! உமது தலை எனக்கு வேண்டாம். குமணனை உயிருடன் கொணர்ந்தால் இப்பொழுது நீர் கூறிய படி இந்த நாட்டை எனக்குக் கொடுப்பீரா?'' எனக் கேட்டார். இளங்குமணன் மீண்டும் உயிருடன் தன் அண்ணனைக் கண்டால் போதும் எனக்கருதி 'நாட்டை நீரே எடுத்துக் கொள்ளும் எனக் கூறினன்.

அதன்மேல் புலவர் இளங்குமணனை அழைத்துச் சென்று காட்டிலிருந்த குமணனைக் காட்டினர். இளங் குமணன் தன் அண்ணன் திருவடிகளில் அடியற்ற மரம்போல் வீழ்ந்து தன்னை மன்னிக்குமாறு வேண் டினன். குமணன் அன்புடன் அவனை எடுத்துத் தழுவிப் புலவரைப் பாராட்டினன். புலவர் அதன் மேல் குமணனை அரசுப் பொறுப்பேற்று ஆட்சி புரியு மாறு அழைத்தார். இளங்குமணனும் அவ்வாறே வேண்டினன். குமணன் முதலில் மறுத்தான். புலவர் 'உமது தலையும் இந்த நாடும் எனக்குரியவை எமக் குரிய தலையில் எமக்கேயுரிய நாட்டின் ஆட்சிப் பொறுப்பைச் சுமத்துகிறேன். இதை யாரும் தடை செய்ய முடியாது' என்று கூறினர். குமணன் புல வரின் திறமையை வியந்து பாராட்டி ஆட்சிப் பொறுப்பை ஏற்று மீண்டும் நாட்டிற்குத் திரும்பினன். இளங்குமணன் மட்டுமின்றி நாட்டு மக்களும் பெருந் தலைச் சாத்தனரை வாழ்த்தினர். புலவரும் வறுமை ஒழிந்து தம் ஊர் திரும்பிச் சென்றர். குமணன் ஆட்சியில் மீண்டும் தமிழ் தழைத்தது.

## வினுக்கள்

1. பண்டை நாளில் வள்ளல்கள் எவ்வாறு வாழ்ந்தனர் ?
2. குமணன் புகழ் பரவியதேன் ?
3. இளங்குமணன் எத்தகையனய் வாழ்ந்து வந்தான் ?
4. இளங்குமணன் ஆட்சி ஏற்றதும் மக்கள் அடைந்த நிலை என்ன ?
5. இளங்குமணன் கயவர் சொற்கேட்டு இட்ட ஆணை என்ன?
6. பெருந்தலைச் சாத்தனுர் வள்ளலைத் தேடிப் புறப் பட்டதேன் ?
7. குமணன் புலவர் வறுமை தீர அளித்த பரிசு என்ன ?
8. இளங்குமணன் மனம் எதனுல் மாறியது ?
9. இளங்குமணன் புலவரை நோக்கிக் கூறியதென்ன ?
10. புலவர் குமணனையும் தம்பியையும் எவ்வாறு ஒன்று சேர்த்தார் ?
11. புலவர் மீண்டும் குமணனை ஆட்சி புரியச் செய்தது எவ்வாறு ?

---

# 14. உண்மை உயர்வளிக்கும்

சில ஆண்டுகளுக்கு முன் உலாந்து நாட்டிலுள்ள ஒரு சிறு நகரில் ஜேகப் என்னும் எளிய உத்தமன் வசித்து வந்தான். சிறு வயதில் அவன் ஒரு பிரபுவின் தோட்டத்தில் வேலைக்கமர்ந்தான். அவனது உழைப்பும் நன்னடத்தையும் பிரபுவின் கருத்தைக் கவர்ந்தன. அவர், தோட்டத்தோடு கூடிய ஒரு வீட்டை வாடகை இன்றி வசிக்க அவனுக்குக் கொடுத்துதவினர். அதில் அவன் பயிரிட்டு வாழ்ந்து வந்தான்.

சில ஆண்டுகள் சென்றபின் அவன் ஒரு நல்ல மாதை மணந்தான். அவர்களுக்கு ஒரு பெண் மகவு பிறந்தது. அதன் பெயர் மேரி. ஐந்து வயதில் மேரி தன் தாயை இழந்தாள். ஜேகப், மேரியை அன்புடன் வளர்த்து வந்தான். அவள் நற்குணங்களின் இருப்பிடமாய் இருந்தாள்; வீட்டு வேலையைச் செவ்வனே செய்தபின் தன் தந்தையின் தோட்ட வேலைகளிலும் அவனுக்கு உதவி புரிந்து வந்தாள். அவ்வேளைகளில் தந்தையும் மேரிக்குப் பல நல்லுரைகளைக் கற்பித்து வந்தான். அத்தோட்டமே அவளது பள்ளியாக விளங்கியது. தந்தையே அவளது ஆசானகத் திகழ்ந்தான்.

ஒரு நாள் மேரி, பிரபுவின் மனைவியையும், அவரது மகள் அமீலியாவையும் சந்தித்தாள். அவ்வமயம் மேரி, அல்லிப் பூக்களாலான இரண்டு பூச்செண்டுகளை வைத்திருந்தாள். அவைகளின் அழகைக் கண்டு வியந்த அச் சீமாட்டிகளுக்கு அப்பூச் செண்டுகளை மேரி மிக்க மரியாதையுடன் வழங்கினுள். தினந்தோறும் நல்ல பூக்களை மாளிகைக்குக் கொண்டு வரும்படி பிரபுவின் மனைவி மேரியைக் கேட்டுக்கொண்டாள். மேரியும் அதற்கு இசைந்தாள். இதனல் அமீலியா மேரியிடம் அன்பு பூண்டாள். அமீலியாவின் பிறந்த நாள் வந்தது. ஜேகப் ஒரு அழகிய கூடையை முடைந்து அதில் அமீலியா என்ற பெயரையும் வரைந்தான். அக் கூடையில் மேரி பல நறுமணம் கமழும் பூக்களை நிரப்பினுள். அந்த அழகிய

பூக்கூடையை அமீலியாவுக்குப் பிறந்தநாட் பரிசாக மேரி அளித்தாள். பூக்கூடையின் அழகைக்கண்ட தாயும் மகளும் பெரு வியப்பெய்தினர்கள். மேரிக்கு ஒரு விலை உயர்ந்த ஆடையைப் பரிசாக அளித்தார்கள். அதைப் பெற்ற மேரியும் வீடு திரும்பினள். அமீலியாவின் பணிப் பெண் ஜூலியட் என்பவள் ஒரு பொருமைப் பேய். விலை உயர்ந்த ஆடையைப் பெற்ற மேரியைத் தனக்குப் பெரும் போட்டியாகக் கருதி அவளை அறவே வெறுக்கவும் அவளுக்கு எவ்விதத்திலும் தீங்கிழைக்கவும் முற்பட்டாள்.

மாளிகையினின்றும் மேரி சென்ற சிறிது நேரத்தில் பிரபுவின் மனைவியினுடைய வைர மோதிரம் காணப்படவில்லை. அம்மோதிரம் இருந்த அறையில் மேரியைத் தவிர வேறு யாரும் நுழையவில்லை. அதனல் மேரியே மோதிரத்தைத் திருடியிருக்க வேண்டும் என்ற சந்தேகம் எழுந்தது. உடனே அமீலியா, மேரியின் வீட்டிற்கு ஓடினள்; மேரியைச் சந்தித்து மோதிரத்தைத் தந்துவிடும்படி கேட்டாள். ஒன்றுமறியா மேரி திடுக்கிட்டாள்; தான் ஒரு திருடி இல்லை எனக் கதறினள். அவளது தந்தையும் பலவாறு மகளை மோதிரத்தைக் கொடுத்து விடும்படி வற்புறுத்தினன். "நான் குற்றமற்றவள் என்பதைக் கடவுள் அறிவார்" எனக் கூறிய மேரியின் வார்த்தைகளை ஜேகப் நம்பினன். ஆனல் அமீலியாவால் நம்பமுடியவில்லை; மாளிகை சென்ருள்.

மேரி கைது செய்யப்பெற்று, சிறையில் அடைக்கப்பட்டாள். அங்கும் கடவுளை நோக்கித் தொழுதவண்ணமிருந்தாள். தான் குற்றமற்றவள் என்பதை அறிந்த கடவுள் தன்னைக் கைவிடமாட்டார் எனத் தன்னையே தேற்றிக்கொண்டாள்.

மறுநாள் மேரியைக் காவலர்கள், நீதிமன்றத்திற்கு அழைத்துச் சென்றனர். அவள் நீதிபதியிடம் தான் குற்றமற்றவள் என்பதைப் பன்முறையும் எடுத்துரைத்தாள். ஆனல் நீதிபதியோ, மோதிரம் இருந்த

அறையில் மேரியைத் தவிர வேறு யாரும் நுழையாத தால், மேரியே அந்த மோதிரத்தைத் திருடியிருக்க வேண்டுமென்ருர். இதைக் கேட்ட மேரி தான் மோதிரத்தைக் கண்ணுல் காணவேயில்லை என்று உரைத்தாள். உடனே ஜூலியட் சாட்சிக் கூண்டில் வந்து நின்ருள்; கடவுளின் மேல் ஆணையிட்டுக் களவு போன அன்று அந்த மோதிரத்தை மேரியிடம் தான் கண்டதாகக் கூறினுள். இதைககேட்ட மேரி ஜூலியட் சொல்வது முற்றிலும் பொய் என்ருள். நீதிபதி கோபம் கொண்டார். மேரியை உண்மையை ஒப்புக் கொள்ளும் வரை சாட்டை கொண்டு நையப் புடைக் கும்படி கட்டளையிட்டார். உடனே காவலர்களும் மேரி யைச் சாட்டை கொண்டு அடித்தனர். இரத்தம் பீறிட் டது; வலிதாங்காமல் மேரி கதறினுள். அந்த நிலை யிலும் மேரி தான் குற்றமற்றவளென்றே கூறினுள். மறுநாள் நீதிபதி மேரி குற்றத்தை ஒப்புக்கொள்ளா விடில் அவளுடன் அவளுக்கு உடந்தையாயிருந்த அவளது தந்தையையும் தூக்கிலிடப் போவதாக அறி வித்தார். இதைக் கேட்ட மேரி நடுநடுங்கினுள். ஆனுல் எது நேர்ந்தபோதிலும் தான் பொய் சொல்லக் கூடா தெனத் தீர்மானித்தாள்.

நீதிபதியைப் பார்த்து "நீதிபதி அவர்களே! நான் குற்றமுள்ளவள் என்று தாங்கள் கருதினுல் என்னைத் தூக்கிலிடுங்கள். குற்றமற்ற என் தந்தையைக் கொல்ல வேண்டாம்" எனக் கூறினுள்.

மூன்ரும் நாள் நீதிபதி தன் தீர்ப்பைக் கூறினுர். மேரிக்கு ஆயுள் தண்டனை விதிப்பதாகவும், அவள் புரிந்த குற்றத்திற்கு உடந்தையாயிருந்த அவளது தந்தை நாடு கடத்தப்படவேண்டுமென்றும் கூறினுர். ஆனுல் இரக்கமுள்ள பிரபு மேரியையும் அவள் தகப்ப னேடு செல்ல அனுமதி அளித்தார். தகப்பனும் மகளும் தங்கள் துன்பப் பயணத்தைத் தொடங்கினர். ஜூலியட் அவர்களைச் சந்தித்தாள். பிறந்தநாட் பரிசாக அமீலியாவுக்கு, மேரி அளித்திருந்த அழகிய

பூக்கூடையை, மேரியின் காலடியில். ஜூலியட் வீசி யெறிந்தாள். மேரியும் அக்கூடையை எடுத்துக் கொண்டு, கண்ணீருடன் கானகம் நோக்கித் தன் தந்தையைப் பின் தொடர்ந்தாள். நாட்டின் எல்லையை அடைந்தவுடன் மேரியும் அவளது தந்தையும் தங்களது உயிர்களைக் காத்தருளிய கடவுளைத் துதித்தனர்.

பின் அவர்கள் இரக்கமுள்ள ஓர் உழவரையும் அவர் மனைவியையும் சந்தித்தனர். அவர்கள் தங்கள் வீட்டிலேயே தங்கும்படி ஜேகப்பையும், மேரியையும் வேண்டினர். அந்த உத்தமர்களின் வேண்டுகோட்கிணங்கித் தந்தையும் மகளும் அவ்விடத்திலேயே தங்கினர். ஜேகப் கூடை முடைந்து பொருள் தேடினன் மேரியும் தையல் வேலையில் ஊதியம் பெற்றாள். தங்கள் உழைப்பால் பெற்ற ஊதியம் கொண்டு தந்தையும் மகளும் மன அமைதியோடு அங்குக் காலங் கழித்து வரலாயினர்.

ஒரு நாள், திடீரென்று ஜேகப் நோய்வாய்ப்பட்டான்; தனது முடிவு காலம் கிட்டிவிட்டதை அறிந்தான்; தனது அருமை மகளுக்கு வேண்டிய பல அறிவுரைகளைப் போதித்தான். ஓர் இரவு மூன்று மணிக்கு அவனது உயிர் உடலை விட்டு நீங்கியது. மேரியும் இப்பாரந்த உலகினில் தன்னந்தனியளானாள். அவளது துன்பமும் தொடங்கியது.

ஜேகப் இறந்த பின், குடியானவனின் ஒரே மகன், ஒரு பணக்காரியை மணந்தான். அவள் கர்வங்கொண்ட பணப்பேய்; பிறரைத் துன்புறுத்தலில் இன்பங் காண்பவள்; தனது கணவனின் வயது சென்ற தந்தையையும், தாயையும் துன்புறுத்தலானாள்; அவர்களுக்கு உண்ண உணவும், உடுக்க உடையும் கூட அளிப்பதை அவள் விரும்பவில்லை. அந்த நிலையில் திக்கற்ற மேரி அவளால் அடைந்த இன்னல்களுக்கு அளவே இல்லை.

ஒரு நாள் அந்த வீட்டில் அக்கொடியவளின் பட்டாடை ஒன்று காணமற் போயிற்று. அதைத் திருடியவள் மேரியே என்று அக்காதகி பழி சுமத்தினாள்:

மேரி உடனே வீட்டை விட்டுப் போய்விட வேண்டும் என்று பெருங் கூச்சலிட்டாள், அச்சமயம் இரவும் வந்தது. உடனே மேரியும் தனது பொருள்களை மூட்டை கட்டிக்கொண்டு வயது சென்ற பெரியவர்களிடம் விடைபெற்றுக் கடவுளை நம்பி அந்த இரவில் தனது தந்தையின் கல்லறையை நோக்கி விரைந்தாள். அங்கு இரவைக் கழிக்க நினைத்தாள். அவள் துயரம் உச்சநிலை அடைந்தது.

தந்தையின் கல்லறையை அடைந்த மேரி தனக்கு நல்லதொரு வழியைக் காட்டும்படி கடவுளை நோக்கி மனமுருக வேண்டினாள். அச்சமயம் 'மேரி! மேரி!' என்று அழைக்கும் குரல் கேட்டுத் திரும்பினாள். தன் பக்கத்தில் அமீலியா இருப்பதை அறிந்த மேரி மாபெரும் வியப்பெய்தினாள். அமீலியாவும், மேரியை அன்புடன் தழுவிக்கொண்டாள். உடனே அமீலியா, மேரி குற்றமற்றவள் என்பது வெளியாகிவிட்டது என்றும். அது தெரிந்ததிலிருந்து. அமீலியாவின் பெற்றோர், மேரியையும் அவள் தந்தையையும் தேடி வருகிறார்களென்றும், அவளைக் கண்டால் அவர்கள் மகிழ்ச்சி அடைவரென்றும் கூறினாள், மேலும் அவள் தன் பெற்றோர்களுடன் அக்கிராமத்திற்கு வந்திருப்பதையும். வந்த இடத்தில், மேரியின் தந்தையின் கல்லறை மேல் காணப்பட்ட பூக்கூடையால், மேரி அவ்விடம் இருப்பதை அறிந்ததையும் சொன்னாள்.

பின்பு அமீலியா வைர மோதிரம் அகப்பட்ட கதையைக் கூறினாள். பிரபுவின் மாளிகைத் தோட்டத்தில் நீண்ட காலமாக ஒரு பியர் மரம் இருந்தது. அது ஒருநாள் புயலால் தாக்குண்டு அசைய ஆரம்பித்தது. அதைக் கண்ட பிரபுவும் அதை வெட்டி விட உத்திரவிட்டார். அம்மரம் வெட்டப்பட்டுச் சாய்ந்தது. அம்மரத்தில் அலப்பும் பறவைகள் ஒரு கூடு கட்டியிருந்தன. அக்கூட்டைக் கைப்பற்றப் பிரபுவின் இரு குழந்தைகளும் விரைந்தனர். அக்கூட்டில் பள பள வென்று மின்னும் பொருள் ஒன்று இருந்தது; அவர்கள் அதை எடுத்து வந்து தங்கள் தாயிடம் கொடுத்

தனர். அதுவே காணமற்போன வைர மோதிரம். அலப்பும் பறவைகள் மின்னும் பொருள்களைத் தூக்கிச் செல்லும் இயல்பு வாய்ந்தவை. அப் பறவைகளில் ஒன்றே திறந்திருந்த சாளரத்தின் வழியே அறையில் புகுந்து ஒளி பொருந்திய மோதிரத்தைத் தூக்கிச் சென்று கூட்டில் வைத்திருக்க வேண்டும் என்னும் உண்மை புலப்பட்டது. மேரி குற்றமற்றவள் என்பது தெளிவாயிற்று. இதை அறிந்த பிரபு மேரியின் மேல் அபாண்டமான பழிசுமத்திய ஜூலியட்டை சிறையில் தள்ளிப் பின், நாட்டைவிட்டு ஓட்டிவிட்டார். இக் கதையைச் சொன்ன பின், அமீலியா தன் பெற்றோர்களி டம் மேரியை இட்டுச் சென்றாள்.

மேரியைப் பிரபுவும், அவரது மனைவியும் அன் புடன் வரவேற்றனர். தாங்கள் மேரிக்கு அறியாமற் செய்த தீங்கிற்குப் பரிகாரமாக, மேரி தந்தையுடன் வாழ்ந்து வந்த வீட்டை மேரிக்கு இனமாக அளித்த தோடு, வைர மோதிரத்தையும் மேரியையே அணிந்து கொள்ளச் செய்தனர். பின்பு ஜேகப்பையும், மேரியை யும் அன்புடன் ஆதரித்த உழவரையும் அவரது மனை வியையும், மேரியுடன் வசிக்கும்படி பிரபு கேட்டுக் கொண்டார். அவர்களும் தமது மருமகளின் கொடு மைக்கு அஞ்சி, மேரியுடன் வசிக்க இசைந்தனர். அவர் களது பிற்கால வாழ்க்கை இன்பமாய் அமைந்தது.

நல்லோர்களான மாமன், மாமியையும், மேரியை யும் பல இன்னல்களுக்குள்ளாக்கிய கொடியவளும் விரைவில் கடவுள் தண்டனை அடைந்தாள். அப்பணப் பேய் தன் பணத்தை வியாபாரியிடம் அதிக வட்டிக்குக் கொடுத்திருந்தாள். திடீரென்று அவ்வியாபாரியின் வியாபாரம் நொடித்தது. அதனால் அவன் பணத் தைத் திருப்பித்தர அவனால் இயலவில்லை, பணம் போன ஏக்கத்தால் அக்கொடியவள் நோய்வாய்ப்பட் டாள். அதே கவலையில் நோய் நீங்கப்பெறாமல் இள மையிலேயே இயற்கை எய்தினாள். மேரிக்கு விரோத மாகப் பொய்யான வாக்கு மூலம் கொடுத்த ஜூலி யட்டும் நோய்வாய்ப்பட்டாள்; இறப்பதன் முன்

தான் தீங்கிழைத்த மேரியைக் கண்டு மன்னிப்புப்பெற விரும்பினாள். மேரியும், எலும்பும் தோலுமாய்ப் பாயில் கிடந்த ஜூலியட்டைக் கண்டு கண்ணீர் வடித்தாள்; அவளை மனப்பூர்வமாக மன்னித்து விட்டதாக ஜூலியட்டிடம் கூறினாள். மேரியின் வேண்டுகோட்கிணங்கிப் பிரபுவின் மனைவியும் ஜூலியட்டிற்கு வேண்டிய உணவு, ஔடதம் முதலியவை அனுப்பினாள். ஆனால் அவைகளால் அவள் நோய் நீங்கவில்லை. தனது இருபத்து மூன்றும் வயதில் அவள் உயிர் துறந்தாள்,

நீண்ட நாட்களுக்குப் பின் தான் பிறந்த இடத்திற்கு வந்த மேரியை அங்குள்ள பலரும் மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். அவர்களில் அவ்வூர் நீதிபதியும் ஒருவர். அவர் ஜேகப்பையும், மேரியையும் தண்டனைக்குள்ளாக்கியதை நினைத்து மனம் நொந்து அதற்குத் தக்க பரிகாரம் தேட நினைத்தார். அச்சமயம் தன் மகன் பிரடரிக் மேரியை நேசிப்பதை உணர்ந்தார். உடனே அதற்குத் தனது முழுச் சம்மதத்தையும் அளித்ததோடு, தானே மேரியிடம் சென்று தனது மகனை மணந்து கொள்ளும்படி கேட்டுக்கொண்டார். அதை அறிந்த பிரபுவும், அவரது மனைவியும், அமீலியாவும் களிப்பெய்தினர். மேரியும் திருமணத்திற்கு இசையவே பிரபுவின் மாளிகையிலேயே அத் திருமணம் வெகு சிறப்பாய் நடந்தது.



வினாக்கள்

1. பிரபு ஜேகப்பிற்கு உதவியதேன்?
2. பிரபு ஜேகப்பிற்குச் செய்த உதவி என்ன?
3. மேரியின் பள்ளி எது?
4. அதன் ஆசான் யார்?
5. அமீலியாவுக்கு மேரி அளித்த பிறந்தநாட் பரிசு என்ன?
6. மேரி ஏன் சிறைப்பட்டாள்?
7. நீதிபதியின் தீர்ப்பென்ன?
8. மேரியின் இருப்பிடத்தை அமீலியா அறிந்ததெப்படி?
9. வைர மோதிரத்தைத் திருடியது யார்?
10. ஜூலியட்டின் முடிவு என்ன?
11. மேரி எவ்வாறு உயர்வுற்றாள்?

*Approved for class use - Non - Detailed Study - by the Madras Text - Book committee, Vide Page 7 of the Fort St. George Gazette dated 16—5—62.*

# PALA NATTUKKATHAIGAL

TAMIL NON - DETAILED STUDY

for

VI STANDARD

by

Pandit N. Lakshminarasimman

P. S. RAJAN PUBLISHING HOUSE, MADURAI.

 [ Price : 0-75